

சாம்பா

# நல்லொழுக்கக் கல்வி

ஐந்தாம் வகுப்பு




விலை : ரூ. 1-75

ஆசிரியர்
புலவர். இளங்கோவன்
Presentation Convent
Girls' High School, Coimbatore.

சாம்பா பப்ளிஷிங் கம்பெனி
12, பிரான்சிஸ் ஜோசப் தெரு, சென்னை-600 001.

## வேண்டுகோள்



"ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்." இதுவள்ளுவர் வாக்கு. "நல்லொழுக்கக் கல்வியே நாட்டின் உயிர்நாடி." என்பது சான்றோரின் உறுதியான எண்ணம். அந்த எண்ணமும் வாக்கும் நிறைவேற எடுத்த பெரு முயற்சியே எங்களின் நல்லொழுக்கக் கல்வி நூல் வரிசை.

"பள்ளிக்கால அட்டவணையில் வாரத்திற்கு இரண்டு பிரிவேளை கள், ஒழுக்க ஆன்மீகப் பண்புக் கல்விக்கு ஒதுக்கப்பட வேண்டும்" இது திரு. பிரகாசா கல்விக் குழுவின் பரிந்துரை ஆகும்.

"நம்முடைய கல்வி முறையில் மிகப்பெரியதும் ஆழமானதுமான குறைபாடு ஒன்று உள்ளது; ஒழுக்கப் பண்புகளையும் ஆன்மப் பண்புகளையும் ஒழுங்காகத் திட்டமிட்டுச் செயல்முறையில் கற்பிக்கா மல் இருப்பதே அக்குறைபாடாகும்" இவ்வாறு கூறுகிறது 1964-66 ஆண்டின் கல்விக்குழு.

நம் தமிழ்நாட்டுக் கல்வித் துறையினர் அக்குறைபாடுகளைப் போக்கும் வகையில் நல்லொழுக்கக் கல்விக்கென புதிய பாடத் திட்டத்தினைச் செம்மையான முறையில் வகுத்து அளித்துள்ளனர்.

நம் பெருமதிப்பிற்குரிய தமிழ் நாட்டுக் கல்வித் துறை இயக்குநர் அவர்கள், நல்லொழுக்கக் கல்வியைச் செம்மையாகவும் சீராகவும் கட்டாயமாகப் பள்ளிகளில் கற்பித்தல் வேண்டுமென ஆணையிட் டுள்ளார். (PROCEEDINGS OF SCHOOL EDUCATION R.C. No 122296/E4/76 Dated 25-9-76.) அது நம்நாட்டு எதிர்காலச் சந்ததிகளின் ஒழுக்கக்கல்வியில் அவர்கள் கொண்டுள்ள அக்கரை யினைக் காட்டுவதாகும்.

இவற்றையெல்லாம் உளங்கொண்டு எழுதப்பட்டு வெளி வருவது எங்கள் தயாரிப்பான இந் 'நல்லொழுக்கக் கல்வி' நூல் வரிசை ஆகும்.

குழந்தையைப் பெற்று வளர்க்கும் அன்புடைத் தாயாக இருந்து—அக்குழந்தையைச் சான்றோனாக்கப் பாடுபடும் தந்தை யாக இருந்து—நல்லறிவூட்டி நாளும் கற்பிக்கும் ஆசிரியனாக அமர்ந்து—அறநெறிகளைக் கற்பிக்க வள்ளுவரின் வாய்மொழியைத் துணையாக ஏற்று—இறைநெறியைப் போதிக்க ஏசுவின், புத்தரின், நபிகள் நாயகத்தின், இந்து சமயத்தலைவர்களின் பக்தனாக இருந்து —மொழிப்பற்று, நாட்டுப்பற்றினைப் போதிப்பதில் அண்ணல்காந்தி யடிகளின் அறநெறியைப் பின்பற்றி, "ஒன்றே குலம்; ஒருவனே தேவன்" 'எம்மதமும் சம்மதம்' என்ற மனப்பக்குவத்தோடு அரசினரின் புதிய பாடத்திட்டத்தினை முழுமையாக ஏற்று இந்நூல் வரிசை எழுதப்பட்டுள்ளது.

எங்களின் இச்சிறந்த படைப்பினை மாணவச் சமுதாயம் கற்றுப் பயனடைய கல்வி நிலையத் தலைவர்களும் ஆசிரியப் பெருமக்களும் பெருமளவில் உதவி புரிந்து எங்கள் சீரிய பணி சிறக்கச் செய்ய அன்புடன் வேண்டுகிறோம்.

சாம்பா பப்ளிஷிங் கம்பெனியார்.

# பொருளடக்கம்

சாம்பா ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை—600 013.

# SYLLABUS FOR MORAL INSTRUCTION.

## STANDARD V.

| *Serial No.* | *Units.* | *Broad outline.* | *Number of periods.* | *Activities.* |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1 | Ethicalvalues .... .... | Ethical and Religious Litera ure. Examples of virtuous deeds; e.g., Justice, self control, unselfishness. | 10 | ........... |
| 2 | Patriotism .... .... .... | Life History of Bagavat Singh; Rani of Jhansi, Shivaji and others. | 6 | Bharathi Songs; Drama. |
| 3 | Dignity of Labour .... .... | Life History of —<br>(i) Sir Muthuswamy Iyer.<br>(ii) Lal Bahadur Sastri.<br>(iii) Abraham Lincoln. | | Dramatisation. |
| 4 | Self Descipline .... .... | (i) Life of Gandhiji in England ....<br>(ii) Observing civic sense.<br>Ex: queues at bus stops and railway stations, etc. | 6 | To wait for one's turn. |
| 5. | Service of others .... .... | (i) Albert Schweitser .... ....<br>(ii) Florence Nightingale.<br>(iii) Gopalakrishna Gokhale.<br>(iv) Gandhiji. | 7 | Dramatising and Service at school functions. |
| | | | 35 | |

——

# இறை வணக்கம்

## 1. இறைவா போற்றி !

அன்பின் ஊற்றும் இறைவா ! போற்றி.
அருளின் வடிவாம் இறைவா ! போற்றி.
எளியவர்க் கிரங்கும் இறைவா ! போற்றி.
இன்னலைத் தவிர்த்தாய் இறைவா ! போற்றி.
செல்வமும் கல்வியும் தந்தவன் நீயே.
சிந்தையில் நின்றருள் புரிபவன் நீயே.
நல்வினை தீவினை விளைப்பவன் நீயே.
நல்லடி போற்றியே வணங்குதும் ஐயா !

—புலவர் தவமணி

## 2. நாமம் நவில்கின்றேன்

குற்றமெலாம் நல்ல குணமாகக் கொண்டருளும்
உற்றதுணை நீயேமற் றோர்துணையும் இல்லையென்றே
நற்றலைமை யாம்உனது நாமம் நவில்கின்றேன்
கற்றவனே ! என்தன்னைக் கைவிடிலென் செய்குவனே!

—இராமலிங்க அடிகள்

# I. அறநெறிகள்

## 1. முதல் நாள்

மணி ஒன்பது ; வகுப்பு மணி அடித்தது. ஆசிரியர் வகுப்பறையில் நுழைந்தார். மாணவர்கள் அனைவரும் எழுந்து நின்றனர்.

வகுப்பில் அமைதி நிலவியது. எல்லா மாணவர்களும் ஒன்றாகச் சேர்ந்து இறை வணக்கப் பாடலை இசையோடு பாடினர்.

பாடல் முடிந்ததும் ஆசிரியருக்குக் காலை வணக்கத்தைத் தெரிவித்தனர். ஆசிரியர் மாணவர்களை வாழ்த்தி இருக்கையில் அமர்ந்தார். மாணவர்களும் மகிழ்ந்த முகத்தோடு அமர்ந்தனர்.

ஆசிரியர் அன்றைய பாடத்தைத் தொடர்ந்தார். மாணவர்கள் கவனத்தோடு கேட்கத் தொடங்கினர்.

"நாம் நடக்கின்றோம்; பேசுகின்றோம். பலவித செயல்களையும் செய்கின்றோம். இவற்றுக்கு உதவி செய்வது நம் உடல். உடல் நலமாக இல்லாவிட்டால் இந்தச் செயல்கள் நடைபெறுமா ? நடைபெறாது.

அந்த உடலும் உயிரோடு கூடி இருந்தால்தான் இயங்கும். உயிர் இல்லாவிட்டால் உடல் இயங்குமா ? இயங்காது.

உயிர் இல்லாத உடல் எதற்கும் பயன்படாது. உடலுக்கு உயிர் வேண்டும்; உயிருக்கு உடல் வேண்டும்.

மாணவர்களே ! இதனால் நாம் என்ன தெரிந்து கொள்ளலாம் ? உயிர் இல்லாமல் நம் உடல் இயங்காது; எதற்கும் பயன்படாது என்பதே.

ஆதலால் நாம் என்ன செய்ய வேண்டும்? உயிரை பாதுகாக்க வேண்டும்; உயிரைப் பாது காக்க உடலேயும் பாதுகாக்க வேண்டும்.

ஒருவன் பெறுவதற்கு அரிய பொருள் உயிரே ஆகும். அந்த உயிரைக் காட்டிலும் சிறந்த பொருளும் உண்டு. அஃது என்ன?'' ஆசிரியர் கேட்டார்.

எவரும் பதில் சொல்லவில்லே.

"குமுதா! உனக்குத் தெரியுமா?'' என்று கேட் டார் ஆசிரியர்.

"ஒழுக்கமே" என்ருள் குமுதா.

குமுதாவை ஆசிரியர் பாராட்டினுர்.

ஒருவனே நல்லவன் ஆக்குவது ஒழுக்கம்; உயர்ந் தவன் ஆக்குவது ஒழுக்கம்; பலரின் பாராட்டுதலேப் பெற்றுத் தருவதும் ஒழுக்கமே; அதனுல் ஒழுக்கமே உயிரினும் மேலானது; உயிரைக் காட்டிலும் பாது காக்கத்தக்கது.

இதனேயே திருவள்ளுவர்,

ஒழுக்கம் விழுப்பம் தரலான்; ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்

என்று தெளிவாகக் கூறியுள்ளார்.

### செய்முறைப் பயிற்சி

1. உடல் இயங்குவதற்கு உதவி செய்வது எது?
2. உயிர் வாழ்வதற்கு எதனேப் பாதுகாக்க வேண்டும்?
3. உயிரைக் காட்டிலும் மேலானது எது? ஏன்?
4. திருக்குறளில் 'ஒழுக்கமுடைமை' என்று ஓர் அதி காரம் இருக்கிறது. படித்ததுண்டா? படியுங்கள்.

நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி.

1. ஒழுக்கம் விழுப்பம் தரும்.
2. ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்.

## 2. அறஞ்செய விரும்பு



அறஞ்செய விரும்பு—இஃது ஔவைப் பாட்டியின் அமுத மொழியாகும்.

அறநெறியோடு வாழ்வதை விரும்பு என்பதே இதன் பொருளாகும். அறநெறியாவது யாது? நம்முடைய சான்ருேர்களால் ஒழுக்கநெறி என வரையறுத்துக் கூறப்பட்டவைகளே அறநெறியாகும். ஆகவே, ஒவ்வொருவரும் ஒழுக்கத்தோடு வாழ வேண்டும்; ஒழுக்கத்தோடு வாழ்வதற்கு முயற்சி செய்தல் வேண்டும்.

நல்வழி, நன்னெறி ஆகியவை நல்லொழுக்க நெறி கூறும் நூல்களேயாகும்.

தெய்வப் புலமைத் திருவள்ளுவர் அறநெறி பற்றி விரிவாகக் கூறியுள்ளார். ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தில் அறநெறியின் சிறப்பினைக் கூறு கின்ருர்.

ஒழுக்கமாவது யாது? நாம் ஒழுகுகின்ற நன் முறைகளே ஒழுக்கம் எனப்படும்; சான்றோர்களால் கூறப்பட்ட ஒழுங்குமுறைகளே ஒழுக்கம் ஆகும். நாம் எவ்வாறு ஒழுகுதல் வேண்டும்?

பெற்றவர் இடத்தும் மற்றவர் இடத்தும் அன்பு காட்ட வேண்டும். வீட்டிற்கு வரும் விருந்தினரை அன்போடு உபசரிக்க வேண்டும். எல்லாரிடமும் இனிமையான சொற்களையே பேசுதல் வேண்டும். பிறர் செய்த நன்றியை மறத்தல் கூடாது. நடுவு நிலைமையைக் கைக்கொள்ள வேண்டும். அடக்கம் உடைமை வேண்டும். பொறுமை வேண்டும். இத் தகைய குணங்களைக் கொண்டொழுகுவதே ஒழுக்கம் உடைமை ஆகும்.

ஒழுக்கம் உடைய ஒருவன் பெறும் கல்வியே உயர்ந்த கல்வி ஆகும். ஒழுக்கத்தைப் போதிக்கும் கல்வியே உயர்ந்த கல்வியாகும்; ஒழுக்கமற்றவன் பெறும் கல்வி கொடியவன் கைக்கொண்ட வாளாகவே பயன்படும்; அது பிறர்க்குத் துன்பத்தையே உண் டாக்கும்.

**காகமும் நாயும்**

நாயை நம் வீட்டில் வளர்க்கிரேம்; அதனைப் போற்றுகிரேம்; ஏன்? அதன் நன்றி மறவாப்

பண்புக்காகத்தான். நாயின் சிறந்த ஒழுக்கம் நன்றி மறவாத குணம் ஆகும்.

பறவைகளுள் காக்கையைப் போற்றுகின்றோம். 'காகா' என அழைத்து உணவு இடுகின்றோம். காரணம் என்ன? இனத்தை அழைத்து அவற்றோடு கூடி உண்ணும் பெருங்குணம் காக்கையிடத்து உள்ளமை யால்தான்.

இதனால் என்ன புரிகிறது? உலகம் ஒழுக்க முடையவனையே போற்றுகிறது; புகழ்கிறது. ஒழுக்கம் அற்றவனை உலகம் போற்றாது; தூற்றும்.

எனவே மாணவர்களே! நீங்கள் இளமையில் கைக்கொள்ள வேண்டிய கட்டளைகள் பத்து; அவற் றைப் பின்பற்றிப் பெரும் பயன் கொள்வீர்களாக.

### செய்முறைப் பயிற்சி

1. சிறந்தது எது? ஏன்?
2. உயிரினும் சிறந்தது எது? ஏன்?
3. ஒழுக்கத்தின் பயன் யாது?
4. ஒழுக்கமாவது யாது?
5. நாயும் காக்கையும் பாராட்டப்படுவது ஏன்?

**நீ கற்றுக்கொள்ளவேண்டிய நன்னெறி :**

அன்பு பாராட்டு.
ஆண்டவனை வழிபடு.
இனிமையாகப் பேசு.
ஈதலை விரும்பு.
உண்மையே பேசு.
ஊக்கமோடு தொழில் செய்.
எண்ணும் எழுத்தும் படி
ஏர்த் தொழில் போற்று.
ஐயம் இட்டு உண்.
ஒன்றே செய் ; நன்றே செய்.

இவையே நீ கைக்கொள்ள வேண்டிய பத்து கட்டளை .

# 3. நேர்மையாளர் இருவர்

நமக்கு உரியதை மட்டுமே நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். பிறர்க்கு உரியதைப் பிறரிடமே கொடுத்து விட வேண்டும். இதுதான் நேர்மை நெறி ஆகும்.

தனக்கு உரியதையும் பிறர்க்குக் கொடுத்தல் கொடைத் தன்மை எனப்படும்; இஃது உயர்ந்த உள்ளம் கொண்டவர்களிடமே காணப்படும். அத்தகைய உயர்ந்த உள்ளம் உடையவர்களை உலகம் விரும்புகிறது; உலகைப் படைத்தவனும் விரும்புகிறான்.

### வேலப்பர் மகள் கண்ணகி

வேலம்பட்டி என்பது ஒரு சிற்றூர். அவ்வூரில் வேலப்பர் என்ற பெயருடைய நிலக்கிழார் ஒருவர் இருந்தார். அவருக்குக் கண்ணகி என்னும் பெயர் கொண்ட மகள் ஒருத்தி இருந்தாள்.

கண்ணகிக்குத் திருமணம் செய்ய நினைத்தார் வேலப்பர். திருமணம் செய்வதென்றால் கையில் பணம் வேண்டுமே! அவருக்குப் பத்துக் காணி நன்செய் நிலம் இருந்தது. அதனால் தன் நிலத்தில் ஒரு காணியை விற்றுத் தன் மகளின் திருமணத்தைச் செய்வது என முடிவு செய்தார்.

### கண்ணப்பர் மகன் கணேசன்

அவ்வூரில் கண்ணப்பர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கும் தொழில் வேளாண்மைதான். ஆயினும் அவருக்குச் சொந்தமாக நிலம் இல்லை. பிறருடைய நிலங்களைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்து வந்தார். அவர் கையில் கொஞ்சம் பணம் இருந்தது.

கண்ணப்பருக்குக் கணேசன் என்னும் பெயரு டைய மகன் ஒருவன் இருந்தான்.

கணேசனுக்குத் திருமணம் செய்ய நினைத்தார் கண்ணப்பர். பெண் கேட்கச் சென்ற இடங்களிலெல் லாம் "மணமகனுக்கு எவ்வளவு நிலம் சொந்தமாக இருக்கிறது?" என்றே கேட்டார்கள்.

அதனால் எப்படியாவது ஒரு காணி நிலமாவது சொந்தமாக வாங்கிய பின்னரே திருமணப் பேச்சைப் பேசுவது என்ற முடிவுக்கு வந்தார் கண்ணப்பர்.

வேலப்பர் ஒரு காணி நிலத்தை விற்கப் போகிறார் என்பதைக் கண்ணப்பர் கேள்வியுற்றார். உடனடியாக வேலப்பரிடம் சென்றார்; நிலத்திற்கு உரிய தொகை யைக் கொடுத்தார்; நிலத்தைத் தன் பெயருக்கு எழுதி வாங்கிக் கொண்டார்.

புதையல் கிடைத்தது

தனக்கு உரிமையான நிலத்தில் ஏரைப்பூட்டி உழத் தொடங்கினார் கண்ணப்பர். கலப்பை பூமியில் அழுந்தி வெளிப்பட்டபோது அங்கிருந்து ஒரு புதை யலும் வெளிப்பட்டது. கண்ணப்பர் புதையலோடு வீட்டிற்கு வந்தார். அந்தப் புதையலை அவரே வைத்துக் கொள்ளலாம். ஆயினும் கண்ணப்பருடைய மனச் சான்று அதனை ஏற்றுக்கொள்ளவில்லை.

கண்ணப்பர் புதையலோடு வேலப்பர் வீட்டிற்குச் சென்றார். "வேலப்பா! உன்னுடைய வயலை உழும் போது இந்தப் புதையல் கிடைத்தது. இதோ! உன் பொருளைப் பெற்றுக்கொள்." என்றார்.

வேலப்பர் நேர்மை உள்ளம் கொண்டவர். அதனால் அவர், "கண்ணப்பரே! நிலத்தை உமக்கு



நான் விற்றுவிட்டேன்; நிலம் உமக்குச் சொந்தம் ஆகிவிட்டது. அதனுல் நிலத்தில் கிடைத்த புதையலும் உமக்கேதான் சொந்தம்; புதையலை எடுத்துக் கொண்டு மகிழ்ச்சியோடு செல்லுங்கள்.'' என்ருர்.

புதையலை ஏற்றுக் கொள்ள கண்ணப்பர் மனம் இடம் கொடுக்கவில்லை.

வேலப்பரோ என்ன கூறினுலும் புதையலை ஏற்றுக் கொள்வதாயில்லை. இறுதியாக இருவரும் வழக்கு மன்றம் சென்றனர்.

## 4. நீதி யார் பக்கம்?

நீதிபதி இல்லம்

நடுவர்; கண்ணப்பர்; வேலப்பர் முதலியவர்கள் காணப் படுகிருர்கள்.

**நடுவர் :** கண்ணப்பரே! உம்மால் கொண்டு வரப்பட்டுள்ள வழக்கு யாது?

**கண்ணப்பர் :** ஐயா, என்னிடம் கொஞ்சம் பணம் இருந்தது. அதனைக் கொண்டு ஒரு காணி நிலம் வாங்கக் கருதினேன். வேலப்பர் தன் நிலத்தை விற்பதாகக் கேள்விப்பட்டேன்; அவரிடம் சென்று உரிய தொகையைக் கொடுத்து ஒருகாணி நிலத்தை நேற்றுத்தான் விலைக்கு வாங்கினேன்.

**நடுவர் :** மிக்க மகிழ்ச்சி; கொண்டுவந்த வழக்கினைக் கூறுங்கள்.

**கண்ணப்பர் :** இன்று காலை நான் புதிதாக வாங்கிய அந்த வயலுக்குச் சென்றேன்; ஏரைப் பூட்டி வயலை உழுதேன். கிடைத்தற்கரிய புதையல் ஒன்று பூமியிலிருந்து வெளிப்பட்டது.

**நடுவர் :** அதனால் .........

**கண்ணப்பர் :** நிலத்துக்கு உரியவர் வேலப்பர் தானே; புதையலும் அவருக்குத்தானே சொந்தமாகும். அதனால் புதையலை எடுத்துச் சென்று அவரிடம் கொடுத்தேன். அவர் வாங்க மறுக்கிறார். அவர், அவர்க்குரிய புதையலைப் பெற்றுக் கொள்ளும்படியாகக் கட்டளை இடுதல் வேண்டும். இதுவே என்வழக்கு ஆகும்.

**நடுவர் :** நல்லது அமருங்கள்! வழக்கில் சுவை இருக்கிறது. எடுத்த புதையலை அடுத்தவருக்குக் கொடுத்தீர். வேலப்பரே! புதையலை நீர் பெற்றுக் கொள்ள வேண்டியது தானே! ஏன் வேண்டாம் என மறுக்கின்றீர்? காரணம் என்ன?

**வேலப்பர் :** நீதிபதி அவர்களே! நிலம் நேற்று வரை எனக்குச் சொந்தமாக இருந்தது. ஆனால் இன்று முதல் அது கண்ணப்பருக்கே சொந்தமானதாகும். அவருக்குச் சொந்தமான நிலத்தில் கிடைத்த புதையலை நான் எப்படி ஏற்றுக் கொள்வது? அவர் நிலம்; அவர் எடுத்த புதையல்; அதை நான் பெறுவது எப்படி நியாயமாகும்?

**நடுவர் :** கண்ணப்பரே! நீர் என்ன சொல்கிறீர்?

**கண்ணப்பர் :** நீதிபதி அவர்களே! நான் வேலப்பரிடம் நிலத்திற்குத் தான் பணம் கொடுத்து வாங்கினேன்; புதையலுக்குப் பணம் கொடுக்கவில்லை. நிலம் எப்படி எனக்குச் சொந்தமோ — அப்படியே புதையல் வேலப்பருக்கே சொந்தமாக வேண்டும்.

**நடுவர் :** கண்ணப்பரே! வேலப்பரே! உம் இருவரிடமும் நேர்மை குடிகொண்டிருக்கிறது. நீவிர் இருவருமே பாராட்டுக்கு உரியவர்களே! அஃதிருக்கட்டும். வேலப்பரே! நீர் ஏன் நிலத்தை விற்றீர்?

வேலப்பர் : நீதிபதி அவர்களே! எனக்கு ஒரு மகள் இருக்கிறாள்; அவளுக்குத் திருமணம் செய்வதற்குப் பொருள் தேவைப் பட்டது. அதனால் நிலத்தை விற்க வேண்டியிருந்தது.

நடுவர் : கண்ணப்பரே! நீர் நிலம் வாங்குவதற்கும் கையில் பணம் இருந்ததுதான் காரணமோ ?

கண்ணப்பர் : நீதிபதி அவர்களே! அது காரணம் அன்று; என் மக னுக்குப் பெண் கேட்கச் சென்ற இடமெங்கும் மாப்பிள்ளைக்குச் சொந்தமாக நிலம் உண்டா? என்ற கேள்வியையே கேட்டனர். அதனால்தான் நிலத்தை விலைக்கு வாங்க நேர்ந்தது.

நடுவர் : அப்படியா? மிக்க மகிழ்ச்சி! நீவிர் இருவரும் வேளாண் குடியினர்; நேர்மை தவறாதவர்கள். இருவருமே புதையலை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. எப்படியிருந்தாலும் புதையல் உரியவர்களுக்குத்தான் சேர வேண்டும். அதற்கு ஒரு வழி இருக்கிறது. அந்த வழியை நீங்கள் இருவரும் ஏற்றுக் கொள்ள வேண்டுமே!

இருவரும் : நீதிபதி அவர்களே! சொல்லுங்கள்; நாங்கள் நீதிக்குக் கட்டுப்படுவோம்.

நடுவர் : கிடைத்திருப்பதோ பெரும் புதையல்! வேலப்பரே! உமக்கு ஒரு மகள் இருக்கிறாள். கண்ணப்பரே உமக்கும் ஒரு மகன் இருக்கிறான்.

இவ்விருவருக்கும் திருமணத்தை முடித்து விட்டால் புதையல் பிரச்சனையும் தீரும்; பெண்ணையும் தேட வேண்டாம்; மாப்பிள்ளையையும் தேட வேண்டாம்.

இதனை நான் வழங்கும் நீதியாகக் கருத வேண்டாம். இஃது என் விருப்பம்; உங்கள் விருப்பம் என்னவோ ?

கண்ணப்பர் : நீதிபதி அவர்களே! தங்கள் விருப்பத்திற்கு நான் தடையாக இருக்கமாட்டேன்.

வேலப்பர் : நானும் மிக்க மகிழ்ச்சியே அடைவேன்.

நடுவர் : நல்ல நாள் குறிப்பிடுங்கள்! 'வாழ்க மணமக்கள்' என வாழ்த்துக் கூற வருகின்றேன்.

## செய்முறைப் பயிற்சி

1. நேர்மையாளர் இருவர் யார் ?
2. கண்ணப்பர் எத்தகையவர் ?
3. வேலப்பர் எத்தகையவர் ?
4. புதையல் யாருக்குச் சொந்தம் ?

5. வேலப்பர் ஏன் புதையலை வாங்க மறுத்தார் ?
6. நீதிபதியின் முடிவு யாது ?
7. உன் தாய் உன்னிடம் மூன்று பழங்களைக் கொடுக்கிருள்; உன் தம்பிக்கும் பங்கு கொடுக்கச் சொல்கிருள்—நீ என்ன செய்வாய் ?

நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி

1. பிறர் பொருளுக்கு ஆசைப்படாதே.
2. அடுத்தவர் பொருள் உன் கைக்கு வந்தால் அவரிடமே சேர்க்க முயற்சி செய்.

## 5. தாய் இல்லாதவர்களுக்குத் தாய்

அன்னை தெரசா :

அனாதைகளின் தெய்வமாக—கதியற்றவர்களுக்குக் கண்ணாக—தாய் இல்லாதவர்கட்குத் தாயாக—நடமாடும் மருத்துவராக விளங்கியவர் அன்னை தெரசா ஆவர்.

ஒரு நாள் அவர் வீதி வழியே சென்று கொண்டிருந்தார். வழியிலே நூறு வயதைக் கடந்த கிழவன் ஒருவன் நோயால் வருந்தித் தவிப்பதைப் பார்த்தார்.

அவர் மனம் இரங்கியது. அக் கிழவனை இரப்போர் இல்லத்திற்கு அழைத்துக் கொண்டு சென்ருர்; அவருக்கு மருத்துவ உதவிகளை அளித்தார் ; அக் கிழவன் ஆறுதல் பெற்ருன்.

பல நாட்கள் மருத்துவம் செய்யப்பட்டது ; ஆயினும் அவன் பிழைக்கமாட்டான் என்பது தெரிந்தது. அதனை அறிந்த மருத்துவர், "அன்னையே ! பூமிக்குப் பாரமாகும் இவனைப் பிழைக்க வைக்க முயற்சிப்பது வீண்தானே." என்று கூறினர். மருத்துவரின் வார்த்தையைக் கேட்ட அன்னையார் மிகவும் வருந்தினர்.

பொது நலச் சேவைக்காகவே தன்னை அர்ப் பணித்துக்கொண்ட அன்னை தெரசா, அந்த மருத்து வரிடம் என்ன கூறினர் தெரியுமா ?

"அக்கிழவன் இறப்பது உறுதி; அவன் இறக் கட்டும்; அஃது ஆண்டவன் சித்தம். ஆயினும் அவன் இறப்பதற்கு முன்னர் நம் இல்லத்தில் நாம் காட்டும் அன்பின் சுகத்தை அனுபவித்த பின்னர் இறக் கட்டுமே." இதுதான் அன்னையின் மணிவாசகம்.

மறுநாள் அன்னை தெரசாவைக் கண்டான் அக் கிழவன். "அன்னையே! நான் இதுவரை பகைமை, வெறுப்பு போன்றவற்றையே கண்டவன்; ஆனால் என் இறுதி நாளாகிய இன்றே இறைவனின் கரங் களால் அணைக்கப்படுகின்றேன்; இறைவனின் கரங்கள் இவைதாம் என்பதை அறிகின்றேன்." என்று கூறி ஆனந்தக் கண்ணீர் வடித்தான்; அன்னை தெரசாவின் கரங்களைத் தொட்டும் காட்டினன்.

என்னே! அன்னையின் தன்னலமற்ற புண்ணிய சேவை. அவர் நினைவே நம் உள்ளத்திற்கு ஆறுதல் அளிக்கிறது.

மாணவர்களே! இந்த உலகமும் உலகத்தில் உள்ள உயிர்களும் நிலை பெற்றிருப்பது எதனல்? தனக்கென வாழாதவர்கள்—பிறர்க்கென்றே வாழ் பவர்கள் உலகில் இருப்பதால்தான். இன்றேல் இவ் வுலகம் என்றைக்கோ அழிந்தே போயிருக்கும.

பெற்றோர்கள்

உங்களுடைய பெற்றோர்கள் இரவு பகல் பாராமல் உழைக்கிறார்கள்; அவர்கள் மட்டும் வாழ்வதற் காகவா? இல்லையே!

நீங்கள் நன்ருக உண்ணவேண்டும்; நல்ல உடைகளை உடுத்த வேண்டும்; சிறந்த கல்வியைக் கற்க வேண்டும். சமுதாயத்தில் ஓர் உன்னத நிலையைப் பெறவேண்டும் என்பதற்காகவே உழைக்கிருர்கள். அவர்கள் உழைப்பு தன்னலம் கருதியதா? இல்லை.

விஞ்ஞானிகள்

விஞ்ஞானிகள் புதிய புதிய கருவிகளைக் கண்டு பிடிக்கிருர்கள்; அதற்காக அவர்கள் எத்தனை இரவுகள் கண் விழிக்கிருர்கள். உணவின்றி உறக்கம் இன்றி அவர்கள் உழைத்த உழைப்பெல்லாம் யாருக்காக?

வானெலி கண்டுபிடித்தவர் ஒருவர்; அஃது அவர்க்கு மட்டுமா பயன்படுகிறது? அனைவர்க்கும் பயன்படுகிறது.

விமானத்தைக் கண்டுபிடித்தவர் ஒருவர். அஃது அவர்க்கு மட்டுமா பயன்படுகிறது? அனைவர்க்குமே பயன்படுகிறது.

கொடிய நோய்களைப் போக்கும் மருந்துகளைக் கண்டுபிடித்தவர் சிலர். அம்மருந்துகள் எல்லாருக்கும் பயன்படுகின்றனவே.

இவ்வாறு தனக்கென்று கருதாமல்—தன்னலம் கருதாமல் உழைத்த உத்தமர்களாலேயே இன்று இந்த உலகம் இன்புற்று வாழ்கிறது.

### செய்முறைப் பயிற்சி

1. மெழுகுவர்த்தி எரிகிறது; அது நமக்கு என்ன நீதியை உணர்த்துகிறது?
2. தன்னலம் கருதாதவர்கள் யாவர்?
3. உலகம் நிலைபெற்றிருப்பது எவரால்?

4. நீ என்ன செய்வாய் ?

1. வழியில் வாழைப்பழத் தோல் கிடக்கிறது.
2. உன் வகுப்பறையில் குப்பை நிறைந்து கிடக்கிறது.
3. உன் வகுப்புக் குடிநீர்ப் பானையில் தண்ணீர் இல்லை.

நீ கற்றுக்கொள்ளவேண்டிய நன்னெறி :

1. பிறர்க்கு உதவி செய்வதில் ஆர்வம் கொள்.
2. பிறர் மனம் மகிழும்படியான காரியங்களையே செய்.

## 6. தன்னடக்கம்

தன்னைத்தானே பெருமையாக எண்ணாத உள்ளம், பேசாத வாய்-பெற்றவர்களே தன்னடக்கம் உடையவர்களாவார்.

நாயிடம் அன்பு :

ஐசக்நியூட்டன் என்பவர் மிகப் பெரும் விஞ்ஞானி ஆவர். அவர் இரவு பகல் பாராமல் பல நாடகள் ஆராய்ந்து விஞ்ஞானக் குறிப்புகளை எழுதித் தம் மேசை மீது வைத்திருந்தார்.

ஒரு நாள் அவரால் அன்புடன் வளர்க்கப்பட்ட நாய் வந்தது; மேசை மீது ஏறியது; விளக்கைத் தட்டிவிட்டது. எரிந்துகொண்டிருந்த விளக்கு நியூட்டனின் குறிப்புகள் அனைத்தையும் எரித்துச் சாம்பலாக்கிவிட்டது.

வெளியே சென்றிருந்த நியூட்டன் அறையின் உள்ளே வந்தார்; நியூட்டனின் நிலைமை எப்படி இருந்திருக்கும்? எண்ணிப் பாருங்கள் !

அவர் என்ன செய்தார் தெரியுமா ? நாயை அன்புடன் தன் அருகே அழைத்தார் ; அதுவும் வாலை



ஆட்டிக் கொண்டு அவர் அருகே வந்தது. அதனை அவர் அடிக்கவில்லை ; ஆதரவாகத் தட்டிக் கொடுத்தார்.

கோபம் கொள்ள வேண்டிய நேரத்தில் அதனை அடக்கிக் காக்கும் தன்னடக்கம் நியூட்டனிடம் இருந்தது. அவர் உலக மேதை ஆனார்.

கூழாங்கல் :

விஞ்ஞான மேதையான ஐசக் நியூட்டன் தன்னைப் பாராட்டியவர்களுக்கெல்லாம் சொன்ன பதில் என்ன தெரியுமா ?

"கடற்கரையில் எவ்வளவு கூழாங்கற்கள் கிடக்கின்றன ; அவற்றைப் போல எத்தனையோ உண்

மைகள் கண்டுபிடிக்கப்படாமல் இருக்கின்றன. நான் கண்டுபிடித்த உண்மைகள் ஒரு கூழாங்கல் அளவே"

இதுதான் அவர் கூறிய பதில். எவ்வளவு தன்னடக்கம் பார்த்தீர்களா?

மாணவர்களே! உங்களுக்கும் இத்தகைய தன்னடக்கம் தேவை.

நாவடக்கம்:

உன் தாய் உன்னிடம் ஒரு வேலை சொன்னாள்; நீ அதனைச் சரியாகச் செய்யவில்லை.

உன் தாய் கடுஞ்சொற்களால் தன் கோபத்தை உன்னிடம் வெளிப்படுத்துகிறாள். நீயும் உன் தாயிடம் உன் கோபத்தை வெளிப்படுத்தலாமா?

உனக்குக் கோபம் வருவதற்கே நியாயம் இல்லை. ஏனென்றால் உன் வேலையை நீ சரியாகச் செய்யவில்லை. நீ உன் வேலையைச் சரியாகச் செய்திருந்தால்கூட உன் கோபத்தை உன் தாயிடம் காட்டுவது முறையாகாது.

நீ உன் மனத்தையும் அடக்கவேண்டும்; நாவையும் அடக்க வேண்டும்.

அடக்கமின்மை ஆபத்தே விளைக்கும்

ஆதி பிதா ஆதாமின் மூத்த மகன் காயின்; இளைய மகன் ஆபேல். மூத்தவன் மூர்க்கக் குணம் படைத்தவன்; இளையவனோ சாதுத்தன்மை படைத்தவன்.

காயின் பயிர்த் தொழில் செய்தான்; ஆபேல் ஆடு மாடுகளை மேய்த்து வந்தான். காயின் தான் விளைத்த விளைபொருட்களில் சிறு அளவினையே

இறைவனுக்குக் காணிக்கையாகக் கொடுத்தான். ஆபேல் தான் வளர்ப்பனவற்றுள் முதல்தரமான ஆடு மாடுகளை இறைவனுக்குக் காணிக்கை ஆக்கினுன்.

இறைவன் ஆபேலின்மீது பிரியம் உடையவ ராஞர். அதனுல் ஆபேலின் செல்வம் மேலும் மேலும் வளர்ந்தது.

காயின் மன அடக்கம் இல்லாதவன்; ஆபேல் மீது பொருமை கொண்டான். பொருமையினுல் ஒரு நாள் ஆபேலைக் கொன்றுவிட்டான்.

காயினுடைய பொருமைக் குணம் அவன் உடன் பிறந்தானை அழிக்கத் தூண்டியது. தன்னடக்கம் இல்லாமையால் தன் தம்பியையே கொன்றுவிட்டான்.

ஆபேல் கொல்லப்பட்டதை இறைவன் அறிந்தார். காயின் மீது கோபம் கொண்டார். அவனைச் சபித்தார். காயின் நாடோடியாகத் திரியத் தொடங்கினுன்.

தன்னடக்கம் இல்லாத காரணத்தால் காயின் அழிவுப் பாதையில் சென்ருன்; அதனுல் அவன் துன் புற்ருன். இது வேதாகமத்தில சொல்லப்பட்ட வரலாறு. அடக்கமின்மை அழிவுக்கே வழி காட்டும். அடக்கமே அமரருள் உய்க்கும.

### செய்முறைப் பயிற்சி

1. உன் பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் மாணவன் அழகான சைக்கிள் வைத்திருக்கிருன். அதைக் கண்டவுடன் உனக்குப் பொருமை ஏற்படுகிறது. ஏற்படலாமா? கூடாது; அந்தப் பொருமைக் குணத்தை அடக்க வேண்டும்.
2. அவன் சைக்கிள் வைத்திருக்கிருன்; நாம் மோட்டார் சைக்கிள் வாங்க வேண்டும் என்ற பேராசை உனக்கு எழலாம்; அதையும் அடக்க வேண்டும்.

3. பேராசை நிறைவேருதபோது மற்றவர் மீது கோபம் ஏற்படலாம்; அதையும் அடக்க வேண்டும்.

4. கோபத்திஞல நம் வாய் கொடுமையான சொற்களேச் சொலலலாம்; கட்டாயம் அதனேக் கட்டுப்படுத்த வேண்டும்.

**நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி**

பொருமை கொள்ளாதே.

பேராசையை விட்டுவிடு.

ஆறுவது சினம்.

இன்னுத சொறகளேப் பேசாதே.

# II. நாட்டுப் பற்று

## 1. தாயும் தாய் நாடும்

நம் முன்னோர்கள் பிறந்து வளர்ந்த நாடு; நாம் பிறந்து வளரும் நாடு நம்நாடு ஆகும். நம் தாய் நமக்கு உண்ண உணவு அளிக்கிறாள்; உடுக்க உடை தருகிறாள்; இருக்க இடம் தருகிறாள். பேசக் கற்றுக் கொடுக்கிறாள்; நம் விருப்பம் போல் வேண்டியதைக் கொடுத்துக் காக்கிறாள்.

நம் தாயைப் போலவே நம் நாடும் நமக்கு வேண்டியவற்றை யெல்லாம் கொடுக்கிறது. அதனால் தான் நம் நாட்டை நாம் தாய்நாடு என்கிறோம்

நாட்டுப் பற்று

தாயிடம் காட்டும் பாசமும் நேசமும் தாய் நாட்டிமுடம் கொள்ள வேண்டும். தாயிடம் காட்டும் அன்பு, தாய்ப்பாசம் ஆகிறது; நாட்டிடம் காட்டும் அன்பு, நாட்டுப் பற்று ஆகிறது.

நாம் ஏமாந்திருந்த நேரத்தில் அன்னியர் நம்மை ஆளத் தொடங்கினர். நாம் அடிமைகளாய் வாழ்ந்தோம். நம்நாடும் அடிமை நாடாக இருந்தது.

சுதந்தரம் பெற்றோம்

நாட்டின் அடிமை விலங்கை அகற்ற நாட்டுப் பற்றுக் கொண்டோர் அண்ணல் காந்தியின் தலைமையில் விடுதலைப் போரில் ஈடுபட்டனர். நாட்டுப்பற்று என்னும் நன்னீர் நாடெங்கும் பாய்ச்சப்பட்டது.

மக்கள் தாய் நாட்டின் மீது பற்றுக் கொண்டனர்; அனைவரும் ஒன்று சேர்ந்தனர்; அன்னியரை, எதிர்த்துப் போராடினர். அகிம்சையும் சத்தியமும் வென்றது.

1947-ஆம் ஆண்டு நம்நாடு விடுதலை பெற்றது. இன்று நாம் உரிமை பெற்ற திரு நாட்டில் வாழ்கிறோம். சுதந்தர மக்களாக உலாவுகின்றோம்.

பெற்ற தாய்க்கு மகன் செய்யவேண்டிய கடமைகள் பல. அதைப் போலவே பிறந்த பொன்னாட்டிற்காகவும் மக்கள் ஆற்றவேண்டிய பணிகள் பலவாகும்.

**வேறுபாடு வேண்டாம்**

நாம் ஒருவரோடு ஒருவர் அன்பு பாராட்ட வேண்டும். நமக்குள் மத வேறுபாடு வேண்டாம்; நமக்குள் சாதி வேறுபாடு வேண்டாம்; நமக்குள் மொழி வேறுபாடு வேண்டாம். நமக்குள் இன வேறுபாடு வேண்டாம். நாம் அனைவரும் இந்த நாட்டு மக்கள், இந்த ஒருமைப்பாட்டு எண்ணமே நாட்டுப் பற்றுக்கு முதற்படியாகும்.

நம் நாட்டில் நாட்டுக்காகத் தம் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்தவர்கள் பலராவர். அவர்களைப் பற்றிய வரலாற்றை நாம் கற்போம்.

### செய்முறைப் பயிற்சி

1. நம் தாய் நமக்குச் செய்யும் உதவிகள் யாவை?
2. நம் நாடு ஏன் தாய் நாடு எனப்படுகிறது?
3. நம் கடமைகள் யாவை?

**நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி**

1. தாயிடம் பாசம் கொள்;
   தாய் சொல்லைத் தட்டாதே.

2. நாட்டுப் பற்றுக்கொள்;
   நாட்டு விடுதலைக்காகப் போராடிய தொண்டர்களைப் பாராட்டு.

# 2. தேசபக்தர் சிதம்பரமும் வெள்ளைக்கார விஞ்சு துரையும்

குறிப்பு : இப்பகுதி, மாணவர்கள் பாடி, நடிக்கப் பயன்படும்.

துரை : நாட்டில் எங்கும் சுதந்தர வாஞ்சையை
நாட்டினாய்—கனல்—மூட்டினாய்;
வாட்டி உன்னை மடக்கிச் சிறைக்குள்ளே
மாட்டுவேன்—வலி—காட்டுவேன்.

வ.உ.சி : சொந்த நாட்டிற் பரர்க்கடிமை செய்தே
துஞ்சிடோம்—இனி—அஞ்சிடோம்;
எந்த நாட்டினும் இந்த அநீதிகள்
ஏற்குமோ ?—தெய்வம்—பார்க்குமோ ?

துரை : கூட்டம்கூடி வந்தே மாதரமென்று
கோஷித்தாய்—எமை—தூஷித்தாய்
ஓட்டம் நாங்கள் எடுக்க வென்றே கப்பல்
ஓட்டினாய்—பொருள்—ஈட்டினாய்



வ.உ.சி : வந்தே மாதரம் என்றுயிர் போம்வரை
வாழ்த்துவோம்—முடி—தாழ்த்துவோம் ;
எந்தம் ஆருயிர் அன்னையைப் போற்றுதல்
ஈனமோ ?—அவ—மானமோ ?

துரை : சுட்டு வீழ்த்தியே புத்தி வருத்திடச்
சொல்லுவேன்—குத்திக்—கொல்லுவேன்
தட்டிப் பேசுவார் உண்டோ ? சிறைக்குள்ளே
தள்ளுவேன்—பழி—கொள்ளுவேன்.

வ.உ.சி: சதையைத் துண்டுதுண்டாக்கினும் உன் எண்ணம்
சாயுமோ ?—ஜீவன்—ஓயுமோ ?
இதயத் துள்ளே இலங்கு மகாபக்தி
ஏகுமோ ?—நெஞ்சம்—வேகுமோ ?

துரை : அடிமைப் பேடிகள் தம்மை மனிதர்கள்
ஆக்கினாய் ; புன்மை—போக்கினாய் ;
மிடிமை போதும் நமக்கென் றிருந்தோரை
மீட்டினாய்—ஆசை—ஊட்டினாய்.

வ.உ.சி: நாங்கள் முப்பது கோடி மக்களும்
நாய்களோ ?—பன்றிச்—சேய்களோ ?
நீங்கள் மட்டும் மனிதர்களோ ? இது
நீதமோ ?—பிடி—வாதமோ ?

## செய்முறைப் பயிற்சி

1. ஒரு மாணவன் வெள்ளைக்கார விஞ்சு துரையாகவும் மற்றொரு மாணவன் சிதம்பரனாராகவும் பாட்டுகளை இசையோடு பாடி நடித்துக் காட்டுதல் வேண்டும்.
2. இப்பகுதியை உரைநடையாக்கியும் நடிக்க செய்யலாம்.
3. மாவீரர் சிதம்பரனாரைப் போன்று மாணவர்கள் மொழிப் பற்றும் நாட்டுப்பற்றும் பெற்று விளங்குதல் வேண்டும்.

# 3. அஞ்சாத சிங்கம்

நாட்டு உரிமையில் நாட்டம் கொண்டு அஞ்சாத சிங்கமாக வாழ்ந்தவர் பகத்சிங். அவர்தம் வரலாறு வீரத்தின் வரலாறு ; விடுதலையின் காவியம்.

பகத்சிங்1907-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் எட்டாம் நாள் பஞ்சாப் மாநிலத்தில் உள்ள லாயல்பூர் மாவட்டத்தில் பிறந்தார்' அவர் தந்தையார் கிசன்சிங். சீக்கிய மரபினரே 'சிங்'என அழைக்கப்படுவர்.

சீக்கிய மரபினர் வீரத்துக்குப் பெயர் பெற்ற வர்கள். அஞ்சாத சிங்கம் போன்றவர்கள்.

பள்ளிப் படிப்பை முடித்த பகத்சிங் தேசியக் கல் லூரியில் சேர்ந்து கற்கத் தொடங்கினர். அங்கு அவருக்குச் சுகதேவ், யச்பால் ஆகிய இருவரும் நண்பர் கள் ஆயினர்.

பகத்சிங்கிற்கு வயது பதினுன்குதான். அந்த வயதிலும் தன் நாடு அடிமைப்பட்டுக் கிடப்பதை அவ ரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

''நாட்டின் விடுதலைக்காக என்ன செய்யலாம்?' என்ற உணர்வே பகத்சிங்கின் உள்ளத்தில் உருவாகிக் கொண்டிருந்தது. 1921-ஆம் ஆண்டில் க்ாந்தியார் அகிம்சா முறையையும், சத்தியாக்கிரகத்தையும் கருவி யாகக் கொண்டு விடுதலைப் போரைத் தொடங்கினர்.

இளைஞர்கள் பலருக்குக் காந்தியாரின் அகிம்சா முறைப் போராட்டத்தில் நம்பிக்கை இல்லை. ஆயுத பலத்தால் ஆட்சிபுரியும் வெள்ளையரை ஆயுத பலத்தா லேயே வெல்ல முடியும் என்று கருதினர்.

எனவே இளைஞர்கள் ஒன்றுகூடி 'பப்பர் அகாலி' என்ற இரகசிய சங்கத்தை நிறுவினர். பகத் சிங் அதில் உறுப்பினர் ஆனார். சங்கம் வன்முறைத் திட்டங்களைத் தீட்டியது. போலீசார் சங்க உறுப்பினர்களைக் கைது செய்யத் தொடங்கினர். பகத் சிங் பஞ்சாபிலிருந்து தப்பிக் கான்பூர் சென்றார்.

கான்பூரில் அமைக்கப்பட்டிருந்த புரட்சி இயக்கத்திலும் பகத் சிங் உறுப்பினர் ஆனார்.

போலீசார் புரட்சி இயக்கத்தினரைக் கண்டு பிடித்துக் கைது செய்தனர். அங்கிருந்தும் பகத் சிங் தப்பி, லாகூரைச் சென்றடைந்தார்.

அங்கும் புரட்சியாளர் சங்கத்தில் மீண்டும் உறுப்பினர் ஆனார். அச்சங்கத்தின் வளர்ச்சியில் பங்கு கொண்டார்.

பகத் சிங் பெரும் புரட்சிவாதி ஆனார். 'சாண்டர்ஸு' துரை கொலை வழக்கு, சட்டமன்றத்தில் வெடி குண்டு வீச்சு வழக்கு ஆகியவற்றைக் காரணமாகக் காட்டிப் பகத் சிங் கைது செய்யப்பட்டார். அவருடன் ராஜகுரு, சுகதேவ் ஆகியவர்களும் கைது செய்யப்பட்டனர்.

விசாரணை பல நாட்கள் தொடர்ந்து நடைபெற்றன.

'மூன்று தேச பக்தர்கள்; மிகவும் இளைஞர்கள்; அன்னியர் தாய் நாட்டை ஆள்வதை வெறுத்தார்கள்; வன்முறையால் அன்னியரை எதிர்த்தார்கள்.

வெள்ளையரசு மூவரையும் சிறைப்படுத்தியது; நீதிமன்றத்தின் கூண்டிலே ஏற்றி விசாரித்தது. அஃதாவது விசாரிப்பதுபோல் நடித்தது. இறுதியில் மூவருக்கும் தூக்குத் தண்டனை விதித்தது.

அந்த மூவரும் யார்? பகத் சிங், ராஜகுரு, சுகதேவ் என்பவர்களே!

"சொந்த நாட்டில் பிறருக்கடிமை செய்து துஞ்சிடோம்" என்று முழங்கிய சுதந்தர வீரர்களுக்கா தூக்குத் தண்டனை? நீதிமன்றத்திலும் "புரட்சி வளர்க! ஏகாதிபத்தியம் ஒழிக!" என முழக்கமிட்டவர்களுக்கா தூக்குத் தண்டனை?

"கைதிகளைக் கண்ணியமாக நடத்து; நாகரிகமாக நடத்து." எனக் கண்டனக் குரல் எழுப்பியவர்களுக்கா தூக்குத் தண்டனை? அந்தோ! கொடுமை.

முடிவைக் கேட்டு நாட்டு மக்கள் கண்ணீர் வடித்தனர். நாட்டுத் தலைவர்கள் உள்ளம் துடித்தனர்.

ஆனால் அந்த மூன்று இளைஞர்களும் கவர்னர் ஜெனரலுக்கு ஒரு மனுவைக் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்த மனு என்ன தெரியுமா? படித்துப் பாருங்கள்! பகத் சிங்கின் நாட்டுப் பற்று எத்தகையது என்பது புரியும்.

"நாங்கள் அன்னியர் ஆட்சியை எதிர்க்கிறோம்; உண்மைதான். உங்கள் எண்ணப்படி பாரத நாட்டுக்கும் இங்கிலாந்து நாட்டுக்கும் நடக்கும் போரே இந்தப் போர். இந்தியருக்கும் வெள்ளையருக்கும் ஏற்பட்ட போராட்டமே எங்கள் போராட்டம். போரில் உங்கள் பகைவர்களாகிய நாங்கள் மூவரும் அரசியல் கைதிகளாக அகப்பட்டுக் கொண்டோம். ஆதலால் நாங்கள் மூவருமே போர்க் கைதிகள்:

'இரக்கம் காட்டுங்கள்' என்று நாங்கள் எவரிடமும் யாசித்தது இல்லை. அந்தப் பழக்கம் எங்கள் நாட்டவர்க்கே இல்லை.



உங்களை நாங்கள் கேட்டுக் கொள்வது வேறு என்ன ? எங்களைப் போர்க் கைதிகளாகக் கருதுங்கள் ; உங்கள் வீரர்களைக் கொண்டு துப்பாக்கியால் சுட்டுத் தள்ளுங்கள் என்பதுதான்.''

இதுதான் அவர்கள் விண்ணப்பம்.

நாட்டுக்காக உயிர் துறப்பதையே அவர்கள் பெருமையாகக் கருதினர் ; வீரமரணத்தையே விரும்பியது வெற்றி மறவர் கூட்டம்.

அவர்களின் வேண்டுகோளை ஆங்கில அரசு ஏற்றதா ? அந்தக் கொடுங்கோல் அரசு அதை ஏற்கவில்லை.

### செய்முறைப் பயிற்சி

1. விடுதலை வேட்கை கொண்டவர்கள் யார்? அவர்கள் பெற்ற தண்டனை யாது?
2. பகத்சிங் ஆட்சியாளருக்குக் கொடுத்த விண்ணப்பம் யாது?
3. பகத்சிங் வரலாற்றால் நீ அறிந்துகொண்டவை யாவை?
4. அடிமை நாட்டில் ஆயிரம் ஆண்டுகள் வாழ்வதைக் காட்டிலும் சுதந்தர நாட்டில் ஒரு நாள் வாழ்ந்தாலே போதும்—இந்த உணர்வு உனக்கு வருதல் வேண்டும்.
5. நாம் இன்று சுதந்தர நாட்டில் வாழ்கின்றோம்; ஆயினும் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்ட சுதந்தரமே நமக்குத் தேவை என்பதை நீ உணர்கிறாயா?

**நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி**

'அச்சம் என்பது மடமை; அஞ்சாமை நம்மின் உரிமை'

ஆதலால் 'அச்சம் தவிர்' 'அஞ்சாமை கொள்'.

## 4. வீர மங்கை

**எங்கும் சுதந்தரம் என்பதே பேச்சு!**

எந்த நாடும் அடிமைத் தனத்தை மனப்பூர்வமாக ஏற்பதில்லை. இந்திய நாடு மட்டும் அதற்கு விதி விலக்கா என்ன?

"அன்னியர் ஆட்சியை ஒழிக்க வேண்டும்; நம் அடிமைத்தனத்தை ஒழிக்க வேண்டும்." என்ற எண்ணம் பாரதம் எங்கும் பரவலாக மக்கள் மன திலே வேரூன்றத் தொடங்கிற்று

**சிப்பாய்க் கலகம்**

ஆங்கிலேயர்கள் இந்து, முஸ்லீம்களின் மனதைப் புண்படுத்தும் காரியங்களைச் செய்தனர். சிப்பாய்கள்

உபயோகிக்கும் துப்பாக்கித் தோட்டக்களில் பசு. பன்றி ஆகியவற்றின் கொழுப்புத் தடவப்பட்டிருந்தது.

பசுவின் கொழுப்பைத் தடவியதால் இந்து வீரர்கள் ஆத்திரமுற்றனர். பன்றியின் கொழுப்பைத் தடவியதால முஸ்லீம் வீரர்கள் கோபங் கொண்டனர். ஆங்கிலேய அதிகாரிகளோ தங்களை ஆளப் பிறந்த பெரியோர்களாக எண்ணிக் கொண்டு திமிராக நடந்து கொண்டனர். இதனால் 1857-ல் நாட்டில் புரட்சி ஏற்பட்டது. அதுவே சிப்பாய்க் கலகம்.

ஜான்சியிலும் புரட்சி

ஜான்சியிலும் வீரர்கள் புரட்சி செய்தனர்; அதன் விளைவாக வெள்ளை அதிகாரிகள் கொல்லப்பட்டனர்: வெள்ளையர் ராணுவம் அழிக்கப்பட்டது. ஜான்சி ராணி லட்சுமிபாய் கோட்டையைத் தன்வசப் படுத்திக் கொண்டார்.

அன்னியர் ஒழிந்தனர்; ஆயினும் நம்மவர்கள் பொறுமை கொண்டனர். "இலட்சுமிபாய்; கேவலம் ஒரு பெண் ; அவள் ஆள்வதா ?''

இத்தகைய எதிர்ப்புப் பல இடங்களிலே இருந்து வந்தன. ஜான்சியைப் பகைவரின் படை முற்றுகை யிட்டது. • ஜான்சிராணி தன் படையைத் திரட்டினாள்; தளபதிகளை நியமித்தாள். தானே ஆடவனைப் போல உடை தரித்தாள்; தலையிலே தலைப்பாகை கட்டிக் கொண்டாள்; இடையிலே வாள் ஏந்திக் கோட்டையைக் காக்கத் தயாரானாள்.

ஒரு நாளா ? இரு நாட்களா ? பல நாட்கள் போர் ; ஜான்சி ராணி வெற்றி பெற்றார். பகைவர் பதுங்கி ஓடினர் ; உள் நாட்டுப் பகை ஒழிந்தது.



எங்கும் அமைதி

ஜான்சியில் அமைதி நிலவியது. ஜான்சி ராணி நல்ல முறையில் ஆட்சி செய்யத் தொடங்கினர்.

அடக்கமும் அறிவும் நிறைந்த ஜான்சி ராணி தெய்வ பக்தி மிக்கவர்; ஏழைகளிடத்து இரக்கம் காட்டும் இயல்பினர்; நாட்டுப் பற்று மிக்கவர்.

ஜான்சி மக்கள் ராணியின் ஆட்சியால் மகிழ்ந்தனர்; அவரைப் போற்றிப் புகழ்ந்தனர்.

மீண்டும் போர்

ஆங்கிலேயர் பெரும் படையோடு மீண்டும் ஜான்சியைத் தாக்கத் தொடங்கினர். ராணியும் தன் படையைத் திரட்டி ஆணுடை தரித்துப் பகைவரை வெட்டி வீழ்த்தினள்.

ஒன்பது நாட்கள் கடுமையான போர்; ஜான்சி கோட்டை வீழ்ந்தது. வந்தவன் வென்றான்; சொந்த நாட்டார் தோற்றனர். இனமே இனத்தைக் காட்டிக் கொடுத்தது; அதனால் ஜான்சி கோட்டை வீழ்ந்தது.

இந்த நிலையில் ஜான்சி ராணி தன் வளர்ப்புப் பிள்ளையுடன் குதிரைமீது ஏறித் தப்பினார்.

ஆங்கிலேயர் படை அவரைத் தொடர்ந்தது. ஜான்சி ராணி ஆணுடை தரித்து ஆயுதமேந்திப் போராடினார்; பலரை வெட்டிச் சாய்த்தார்; கடுமை யான போர் நடைபெற்றுக் கொண்டிருந்தபோது பகை வரின் குண்டு ஒன்று ராணியின் முதுகில் பாய்ந்தது.

மயங்கிய நிலையில் இருந்த ராணி, பகைவன் ஒரு வனால் கொலை செய்யப்பட்டார். 'உரிமை! உரிமை! எனப் போராடிய ஜான்சி ராணி லட்சுமிபாய் மறைந்தார். ஆயினும் அவர் புகழ் இன்றும் நிலை பெற்றிருக்கிறது. பெண்மையின் வீரத்திற்குப் பெருமை தேடித் தந்தவர் ராணி லட்சுமிபாய்! வாழ்க அவர் திருப்பெயர்!

செய்முறைப் பயிற்சி

1. நம் நாட்டு மகளிரும் வீரம் நிறைந்தவர்கள் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர் ஜான்சி ராணி. அவரைப் போன்ற வீரமங்கையர் வேறு யாரைப்பற்றியாவது நீ படித்திருக்கிறாயா?
2. ஜான்சி ராணி போரிலே வல்லவர் என்பதை விளக்குக.
3. ஜான்சி ராணியின் இயல்பினைக் கூறுக.

**நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி.**

1. சுதந்தரமே நம் பிறப்புரிமை.
2. பணிந்து பல நாட்கள் வாழ்வதைக் காட்டிலும் நிமிர்ந்து ஒரு நாள் வாழ்வது மேல்.

# 5. சத்ரபதி சிவாஜி

[சிவாஜி தன் படைக்குக் கூறியது]

ஜயஜய பவானி ! ஜயஜய பாரதம் !
ஜயஜய மாதா ! ஜயஜய துர்க்கா !
வந்தே மாதரம் ! வந்தே மாதரம் !
சேனைத் தலைவர்காள் ! சிறந்த மந்திரிகாள் !
அதிரத மன்னர்காள் ! துரகதத் ததிபர்காள் !

*　　　　*　　　　*

பாரத பூமி பழம்பெரும் பூமி
நீரதன் புதல்வர் ; இந்நினை வகற்றுதீர் !
பாரத நாடு பார்க்கெல்லாம் திலகம்
நீரதன் புதல்வர் ; இந்நினை வகற்றுதீர்
வானக முட்டும் இமயமால் வரையும்
ஏனைய திசைகளில இருந்திரைக் கடலும்
காத்திடு நாடு ; கங்கையும் சிந்துவும்
தூத்திரை யமுனையும் சுனைகளும் புனல்களும்
இன்னரும் பொழில்களும் இணையிலா வளங்களும்
உன்னத மலைகளும் ஒளிர்தரு நாடு;
பைந்நிறப் பழனம் பசியிலா தளிக்க
மைந்நிற முகில்கள் வழங்கு பொன்னுடு;
தேவர்கள் வாழ்விடம் திறலுபர் முனிவர்
ஆவலோ டடையும் அரும்புகழ் நாடு.

*　　　　*　　　　*

பாரத நாட்டிசை பகரயான் வல்லனோ ?
நீரதன் புதல்வர் நினைவகற் றுதீர் !
தாய்த்திரு நாட்டைத் தறுகண் மிலேச்சர்
பேய்த்தகை கொண்டோர் பெருமையும் வண்மையும்
ஞானமும் அறியா நவைபுரி பகைவர்
வானகம் அடக்க வந்திடும் அரக்கர்போல்
இந்நாள் படைகொணர்ந்து இன்னல் செய்கின்றார்.

*　　　　*　　　　*

மற்றிதைப் பொறுத்து வாழ்வதோ வாழ்க்கை
வெற்றிகொள் புலையர்தாள் வீழ்ந்துகொல் வாழ்வீர் !
மொக்குகள்தான் தோன்றி முடிவது போல
மக்களாய்ப் பிறந்தோர் மடிவது திண்ணம்.
தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை
மாய்த்திட விரும்பார் வாழ்வுமோர் வாழ்வுகொல் !
மானமொன் றிலாது மாற்றலர் தொழும்பராய்
ஈனமுற்றிருக்க எவன்கொலோ விரும்புவான் !
தாய்பிறன் கைப்பட சகிப்பவ னாகி
நாயென வாழ்வோன் நமரில்இங் குளனோ ?

—பாரதியார்

## செய்முறைப் பயிற்சி

1. 'எவற்றை மறக்கவேண்டாம்' எனச் சிவாஜி பாரத வீரர்கட்குக் கூறுகின்றார் ?
2, பாரத நாட்டின் வளங்கள் எவை ?
3. பாரத வீரர்களின் கடமை என்ன ?

**நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி.**

1. தன்மானத்தோடு வாழ்.
2. தலைநிமிர்ந்து வாழ்.
3. உன் நாட்டவருக்கு உதவி செய்.
4. அன்னியருக்கு இடம் கொடாதே.

# 6. மாவீரர் சிவாஜி

**பிறப்பு**

மகாராட்டிர மன்னர்களுள் சிறந்தவர் சிவாஜி. இவர் இந்துப் பேரரசை நிலைநிறுத்திய இணையற்ற வீரர்; அஞ்சாமையும் ஆண்மையும் நிறைந்தவர்.

ஷாஜி பான்ஸ்லே, பீஜப்பூர் சுல்தானிடம் பணியாற்றி வந்தார். அவர் தம் அருமை மனைவியாரே

ஜீஜாபாய். இவ்விருவரின் மைந்தராக 1694-ல் பிறந்தார் சிவாஜி.

### இளமை

ஜீஜாபாய் உயர்ந்த பழக்க வழக்கங்களை உடையவர்; பெரிய வீட்டுப் பெண்; பதிபக்தி நிறைந்தவர்; குழந்தை சிவாஜிக்கு அன்னை ஜீஜாபாய் இராமாயணம், பாரதம் போன்ற இதிகாசக் கதைகளைக் கூறுவார்; இராமபிரான், மாருதி, பீமன், அருச்சுனன் முதலிய வீரர்களின் கதையைச் சொல்லுவார்.

இக்கதைகளைக் கேட்டு வளர்ந்தார் சிவாஜி; அதனால் அவரிடம் பெற்ருேர் பக்தி, சமயப் பற்று, நாட்டுப்பற்று, வீரம் முதலிய பண்புகள் நிறைந்தன.

கொண்டதேவ் என்ற பிராமணப் பண்டிதர் இவருக்குக் குதிரை ஏற்றம் கற்றுக் கொடுத்தார்; வில் வித்தை, வாள் வித்தை பயிற்றுவித்தார். அரசாங்க நிர்வாகம் போன்றவற்றைக் கற்பித்தார். தனக்குப் பதினன்கு வயது நிரம்புவதற்குள் சிவாஜி போர்க் கலை, அரசியல், நிர்வாகம் ஆகியவற்றைத் திறம்படக் கற்றுக் கொண்டார்.

### வீரர் சிவாஜி

சிவாஜி கட்டுக் கோப்பான உடல் கொண்டவர்; கம்பீரமான தோற்றம் உடையவர்; சோம்பல் அற்றவர்; இந்துமத தர்மத்தில் தளராத நம்பிக்கை கொண்டவர்.

அவர் முஸ்லிம்களின் ஆட்சியை வெறுத்தார்; பசு வதையைக் கண்டித்தார். இந்த இரண்டையும் ஒழிக்க இந்து அரசை அமைக்கும் எண்ணத்தைக் கைக்

கொண்டார்; அதையே தன் வாழ்க்கையின் இலட்சியமாகக் கருதினர்.

மாவலிகள் என்பவர்கள் மலைசாதியினர்; துணிவும் வலிவும் கொண்டவர்கள்; அவர்களின் உதவியோடு ஒரு படையைத் திரட்டினர்.

மாவலில் உள்ள கோட்டையை முதலில் சிவாஜி தன் படை வீரர்களோடு சென்று கைப்பற்றினர்.

தொடர்ந்து தோரன் கோட்டை, சூபா கோட்டை சிம்மக் கோட்டை, கல்யாண் கோட்டை போன்றவற்றைக் கைப்பற்றினர்.

சிவாஜியின் புகழ் பாரத மெங்கும் பரவியது. அவர் பெயரைக் கேட்டாலே பகைவர்கள் அஞ்சினர்.

பகை வென்றார்

பீஜப்பூர் சுல்தான் சிவாஜியின் வெற்றியைக் கேட்டுக் கோபங் கொண்டார். அதனல் சிவாஜியை அழிக்கப் பெரு முயற்சி செய்தார். அதில் சிவாஜியே வெற்றி பெற்றார்.

மொகலாயப் பேரரசர் ஔரங்கசேபு சிவாஜியை எப்படியாவது கொல்ல வேண்டும் என்று கருதினர். அதற்காகப் பெரு முயற்சி செய்தார். அவர் முயற்சியும் தோற்றது. சிவாஜிக்கோ வெற்றி மேல் வெற்றியே குவிந்தது.

முந்நூறுக்கும் மேற்பட்ட கோட்டைகள் சிவாஜிக்குச் சொந்தமாயின. அவற்றின் வரியாக ஆண்டு ஒன்றுக்கு ஒரு கோடி ரூபாய் வருமானம் கிடைத்தது.

படைத்தலைவர்களும் குடிமக்களும் சிவாஜி, மகாராஜாவாக முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்று

வற்புறுத்தினுர்கள். அவ்வாறே தர்பார் நடந்தது. சிவாஜி சத்திரபதியாக முடிசூட்டப்பட்டார்.

சிவாஜியின் ஆட்சியில் இந்துமதம் தழைத்தது. பிறமதங்களும் பாதுகாக்கப்பட்டன. வறுமை ஒழிந்தது; வளம் கொழித்தது. சிவாஜியின் வீரம் இளைஞர்கட்கு வழி காட்டுவதாகும். அவர் தம் அஞ்சாமை நம் நெஞ்சில் நிலைக்க வேண்டும். அவர் பகை வென்ற வரலாற்றை இந்த வகுப்பிலும் அடுத்த வகுப்பிலும் படிக்கவிருக்கிறீர்கள்.

### செய்முறைப் பயிற்சி

1. சிவாஜியின் பெற்றோர் யாவர்?
2. சிவாஜியின் தாய் அவருக்கு எத்தகைய கதையைக் கூறுவாள்?
3. சிவாஜியின் குரு யார்? அவர் சிவாஜிக்குக் கற்பித்தது என்ன?
4. சிவாஜி இந்துப் பேரரசை நிலை நாட்டுவதையே தம் குறிக்கோளாகக் கொண்டார். அதனை நிறை வேற்றினுர்—ஏன்?

   உன் குறிக்கோள் என்ன? அதை எவ்வாறு நிறைவேற்றுவாய்?
5. சிவாஜி தம் மதத்தின் மீது ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார். அதன் வழியே நடந்தார்.

   நீ எந்த மதத்தின் மீது ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருக்கிருய்? அதன் வழி நடக்கிருயா?

நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி:

1. உன்னதமான ஓர் இலட்சியம் உன் உள்ளத்தில் உருவாக வேண்டும்.
2. அந்த இலட்சியத்தை அடைவதிலேயே நீ கண்ணும் கருத்துமாக இருத்தல் வேண்டும்.
3. உன்இலட்சியம் யாது?

## 7. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே

வந்தே மாதரம் என்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குதும் என்போம் (வந்தே)

ஜாதி மதங்களைப் பாரோம்—உயிர்
ஜன்மம் இத்தேசத்தில் எய்தினராயின்
வேதியராயினும் ஒன்றே—அன்றி
வேறுகுலத்தின ராயினும் ஒன்றே (வந்தே)

ஈனப் பறையாக ளேனும்—அவர்
எம்முடன் வாழ்ந்திங் கிருப்பவர் அன்றோ?
சீனத்த ராய்விடு வாரோ?—பிற
தேசத்தார் போற்பல தீங்கிழைப் பாரோ? (வந்தே)

ஆயிரம் உண்டிங்கு ஜாதி—எனில்
அன்னியர் வந்து புகல்என்ன நீதி—ஓர்
தாயின் வயிற்றில் பிறந்தோர்—தம்முள்
சண்டை செய்தாலும் சகோதரர் அன்றோ? (வந்தே)

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே—நம்மில்
ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம் வந்தாற்பின் நமக்கெது வேண்டும்? (வந்தே)

—பாரதியார்

## 8. சந்திப்பு

(பேரரசர் ஔரங்கசேப்பிடம் 'சிவாஜியை ஒழித்துக்கட்டுகிறேன்.' என வஞ்சினம் கூறி வருகிறான் அப்சல்கான். அதனால் தன்னை வந்து சந்திக்கும்படி சிவாஜிக்குச் சொல்லி அனுப்புகிறான்; சிவாஜியோ தன் இருப்பிடத்திற்கு அப்சல் கானை அழைக்கிறார்; இருவரும் தனியே சந்திப்பதாகவும் நிராயுதபாணியாகச் சந்திப்பதாகவும் ஒப்பந்தம்)

இடம் : பிரதாப்சிங் கோட்டை அருகே உள்ள கூடாரம்.

இருப்போர் : சிவாஜி, அப்சல்கான்.

நிகழ்ச்சி : ஔரங்கசேபுவின் படைத்தலைவன் அப்சல்கான் சிவாஜியைச் சந்திக்கின்ருன்.

சிவாஜி : கான் சாகிப் அவர்களே! தங்கள் வருகையால் நான் மகிழ்ச்சி அடைகின்றேன் ; வருகை தனித்தா? அல்லது.........

அப்சல் : ஏன் அச்சமாக இருக்கிறதா?

சிவாஜி : அச்சமா! எனக்கா? மராட்டிய மாவீரர்கள் அச்சம் என்பது இன்னதென்றே அறியாதவர்களாயிற்றே!

அப்சல் : அஞ்சமாட்டீர்! அஃது எனக்குத் தெரியும். அதனுல் தான்!

சிவாஜி : படைத் தளபதி—படையோடு வந்திருக்கிறீர்; பாதுகாப்பாகச் சுற்றிப் படைகளை நிறுத்தி வைத்திருக்கிறீர். நல்லது! நடக்கட்டும் உமது நாடகம்!

அப்சல் : உண்மை தெரிந்ததும் உதறல் எடுக்கிறதா? அஞ்சாதீர்! சந்திப்பதற்கே அழைத்தேன்; ஆனுல் மறுத்துவிட்டீர்! பயம் காரணமாக இருக்கலாம்; பரவாயில்லை.

சிவாஜி : வரவேற்புக் கூறவேண்டியவன் நான்; இஃது என் கோட்டை; வரவேண்டியவர் நீர்.

அப்சல் : ஆமாம்! ஆமாம்! இஃது உம் கோட்டை ...... ஆனுல் அதைக் கோட்டை விடாமல் இருக்க வேண்டும்.

சிவாஜி : அப்சல்கான்! நீதான் கோட்டையை ஒவ்வொன்ருகக் கோட்டைவிட்டுக் கொண்டிருக்கிருய்; நான் எடுத்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் ஏதாவது மிச்சம் இருந்தால் கொடுத்து விட்டுப் போகும் எண்ணம் உண்டா?

அப்சல் : நிராயுதபாணியாக நிற்கிருய்! வார்த்தைகளை அளந்து பேசு.

சிவாஜி : நெஞ்சில் துணிவு இருக்கிறது. கையில் வலிவும் இருக்கிறது. அளப்பதற்குப் படியும் இல்லை; மரக்காலும் இல்லை.

அப்சல் : இதோ பார்த்தனையா? அழகான வாள்தானே என்று எண்ணுதே; பகையை அழித்திடும் வாள்.

சிவாஜி : வாளா? விளையாடப் போகிருயா? இல்லை! வேடிக்கை காட்டப் போகிருயா?

**அப்சல்:** அஃதிருக்கட்டும். சிவாஜி! நீ சாதாரணக் குடியானவனுடைய பிள்ளைதானே! இவ்வளவு நேர்த்தியான கூடாரம் உனக்கு எப்படிக் கிடைத்தது?

**சிவாஜி:** அதைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிருய்? நீயும் ஒரு மணியக்காரன் மகன்தானே; உனக்கு எப்படி......?

**அப்சல்:** என்ன சொன்னுய்.

[சீற்றத்துடன் பாய்ந்தான் அப்சல்கான்; சிவாஜியோ அவனேடு போராடி—புலி நகத்தால் அவன் வயிற்றைக் கீறி அவனை வீழ்த்தினர்.]

**சிவாஜி:** அப்சல்கான்! வென்றது யார்? விவசாயியின் பிள்ளையா? மணியக்காரன் மகனு? நீ என்னை ஏமாற்ற நினைத்தாய்! நான் உன்னை ஏமாற்றினேன். நீ ஏமாந்தாய்; நான் ஏமாற்றினேன். உன் வாள் என்னை என்ன செய்யும்? இதோ பார்! தங்க அங்கியின் உள்ளே இரும்புக் கவசம்; தலைப்பாகையின் உள்ளே இரும்புத் தொப்பி; கையிலே புலி நகம்; மேலங்கியின் கீழே கட்டாரி; உன் ஏமாற்று வித்தை எனக்குத் தெரியும்; அதனல் உன்னையே நான் ஏமாற்றினேன்.

**அப்சல்:** துரோகி!

**சிவாஜி:** நானு? என்னுடைய கோட்டையைக் கைப்பற்ற வந்த நீயல்லவா துரோகி? நிராயுதபாணியைக் கொல்ல வந்த நீயல்லவா துரோகி!

**அப்சல்:** ஐயோ! அம்மா!

**சிவாஜி:** நன்ருக அழு; அழுது கொண்டே உயிரை விடு; பழிக்குப் பழி வாங்கிவிட்டேன். என் தமையன் சாம்பாஜியைக் கொலை செய்தாயே! நினைவிருக்கிறதா? அப்சல்கான். அந்தப் பழிக்குப் பழி இதோ!

[சிவாஜி கட்டாரியால் குத்த — அப்சல்கான் இறந்து படுகிருன்.]

(மாணவர்கள் இந்த நாடகத்தை நடித்துப் பயிற்சி பெறுவார்களாக! ஆசிரியர்கள் கதை நிகழ்ச்சியை விளக்கிக் கூறுவார்களாக!]

# III. உழைப்பின் உயர்வு.

## 1. உழைப்போம்! உயர்வோம்!!

சிற்றெறும்புகள்

வரிசை வரிசையாகச் செல்லும் சிற்றெறும்பு களைக் கவனியுங்கள்; அவை எங்கே செல்கின்றன?

மழைக் காலம் வரப்போகிறது. இருக்க இடம் வேண்டும்; உண்ண உணவு வேண்டும்; அதனால் துளித் துளியாக மண்ணை வாயில் கல்விப் புற்று அமைக்கும் புதுப் பணியைச் செய்கின்றன; அதுதான் அவற்றின் கோட்டை; அந்தக் கோட்டையிலே தேவையான உணவுப் பொருள்களைச் சேகரித்து வைக் கின்றன.

உழைப்பதில் அந்தச் சிற்றெறும்புகள் சலிப்பதே இல்லை; ஓயாத உழைப்புத்தான்; அதனால் தங்கள் தேவையை நிறைவேற்றிக் கொள்ளுகின்றன.

தேனீக்கள்

தேனீக்களைப் பாருங்கள்! அங்கும் இங்கும் ஓயாது பறந்து திரிகின்றனவே! ஏன்? வண்ண மலர்களை நாடிச் செல்கின்றன: அவற்றிலுள்ள சுவை யான தேனைச் சொட்டுச் சொட்டாகக் கொண்டு வந்து சேர்க்கின்றன. தேன் கூடு உருவாகிறது; தங்கள் தேவைக்கு உணவைச் சேகரிக்கின்றன.

கூடு கட்டுகிறது

அதோ பாருங்கள்! அந்த மரத்திலே காகம் என்ன செய்து கொண்டிருக்கிறது? கவனியுங்கள்!

குச்சிகளைக் கொண்டுவந்து குறுக்கும் நெடுக்கு மாக அடுக்குகிறது. நாரினைக் கொண்டுவந்து பஞ்சு

மெத்தை அமைக்கிறது. அழகான கூட்டினைக் கட்டி முடிக்கிறது. மனிதனாலும் கட்டமுடியாத அழகான வீடாக அது அமைகிறது.

இவ்வாறு உயிர்கள் ஒவ்வொன்றும் ஓயாமல் உழைக்கின்றன; அதனால் தங்களுக்குத் தேவை யானதைத் தேடிக் கொள்ளுகின்றன.

மனிதனும் உழைக்கிறான்

மனிதனும் தன் உழைப்பினாலேயே தன் தேவையை நிறைவு செய்து கொள்ளுகின்றான். வசதி படைத் தவர்கள் முன்னேறுவதற்குப் பல வழிகள் உண்டு. வசதியற்றவர்கள் முன்னேறுவதற்கு ஒரே வழிதான் உண்டு. அஃது உழைப்பே ஆகும்.

உழவன் உழவுத் தொழிலைச் செய்யாவிட்டால் உணவு ஏது?

கட்டடக் கலைஞன் வீடுகளை அமைத்துத் தாரா விட்டால் குடியிருக்க வீடு ஏது?

நெசவாளி ஆடை நெய்யாவிட்டால் நமக்கு உடை ஏது? உழைப்பினாலேயே நம் தேவைகள் நிறைவு பெறுகின்றன.

குடிசையிலே வாழ்ந்தவர்களும்கூட கோபுரத் திலே வாழும் வாழ்வு பெற்றிருக்கிறார்கள். எதனால்? தங்கள் அயராத உழைப்பினால்தான்.

உழைப்பினாலே ஒருவன் முன்னேற முடியும்; ஒரு நாடு முன்னேற்றம் அடையும். அதனால்தான் பாரதியார்.

> ''உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்—வீணில்
> உண்டுகளித்திருப்போரை நிந்தனை செய்வோம்''

என்று பாடினார்.

உழைப்பால் உயர்ந்தோர் பலர்; அவர்தம் வாழ்க்கை வரலாறு மாணவர்தம் வாழ்வுக்கு வழி காட்டும். அவர் தம் வரலாற்றினைக் கற்போம்; அவர் வழி உழைப்போம்.

### செய்முறைப் பயிற்சி

1. உழைப்பின் பெருமையை உணர்த்துவன; எறும்பின் புற்று; தேனின் கூடு; காக்கையின் கூடு முதலியவை.
2. நீயும் எறும்புகளைப்போல்—தேனீக்களைப்போல் உழைக்க வேண்டும்; உயர்வு பெற வேண்டும்.
3. உனக்கு இப்போது கற்கின்ற பருவம்; சோம்பலாக இருந்தால் கல்வியில் முன்னேற முடியுமா? முடியாது.

### நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி

1. அன்றுடப் பாடங்களை அன்றுடம் படி.
2. பொது நூல்களில் நல்லனவற்றை வாசி.
3. உடல் உழைப்புக்கும் பயிற்சி கொடு.
4. ஓய்வு உனக்கு வேண்டாம்; உழைப்புக்கே முதலிடம் கொடு.

## 2. அண்ணல் ஆபிரகாம்

தாமஸ் லிங்கன் எழுத்தறிவு இல்லாதவர்; தச்சு வேலை செய்பவர். அவர் மரம் வெட்டுவார்; அறுப்பார்; பலகை ஆக்குவார்; பெட்டி செய்வார். என்ன பெட்டி அது? சவப் பெட்டிதான்; இறந்தவர்களை அடக்கம் செய்யும் பெட்டி. அவர்தாம் அண்ணல் ஆபிரகாம் லிங்கனின் தந்தை.

அவர் வாழ்ந்த இடம் காட்டுப் பகுதியில் ஒரு குடிசை; அங்கேதான் ஆபிரகாம் லிங்கன் பிறந்தார்;

அவர் படுக்கை கரடித் தோல்; காட்டுவெளிதான் அவர் கற்பனைக் கலைக்கூடம்.

எளிய குடிசையில்—ஏழைப் பெற்றோருக்குப் பிறந்த ஆபிரகாம் லிங்கன் அமெரிக்க நாட்டுக் குடியரசுத் தலைவராக விளங்கினார்; அடிமை முறையை ஒழித்தார். எப்படி?

எல்லாம் உழைப்பு! உழைப்பு!! உழைப்பேதான். உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ? முயற்சி உடையார் இகழ்ச்சி அடைவதுண்டோ?

நாடகம்

## பிறப்புரிமை தந்த பிதா

நாடக முன்னுரை:

தந்தை தாமஸ் லிங்கன். தாய் நான்ஸி கேங்ஸ். இவர்களின் செல்வமகனே ஆபிரகாம் லிங்கன்.

ஆபிரகாம் லிங்கன் அமெரிக்க நாட்டிலே 1809-ஆம் ஆண்டில் பிறந்தார். தந்தை தச்சு வேலை செய்து பிழைப்பவர்; தாய் சிறிது கற்றவள்.

ஆபிரகாம் லிங்கனுக்கோ கற்பதிலே ஆர்வம் அதிகம். கைக்குக் கிடைத்த நூல்களையெல்லாம் கற்று வந்தார். அவருக்கு உடல் வலிவும் உண்டு; உள்ளத்திண்மையும் உண்டு.

இளமையிலே பேச்சுப் பயிற்சியும் எழுத்துப் பயிற்சியும் பெற்றார். ஒரு நாள் அவர்கண்ட காட்சி...

*காட்சி—1*

இடம்: *அடிமைகளை ஏலம் கூறும் இடம்.*

இருப்போர்: *வியாபாரி, அடிமைப்பெண்-விலை பேசுவோர்; ஆபிரகாம்லிங்கன்.*

வியாபாரி: இதோ! இந்த அடிமைப் பெண்ணின் விலை பத்து டாலர்........

முதல் ஆள்: பதினைந்து டாலர்.

வியாபாரி: அடிமையை நன்ருகப் பாருங்கள்! உடல் கொழு கொழு என்று இருக்கிறது. நான்கு ஆட்களின் வேலையை இவள் ஒருத்தியே செய்வாள். விலையை கூட்டிக் கேளுங்கள். இப்போது விட்டுவிட்டால்—பின்னர் எப்போதும் கிட்டாத பொருள் இது.

இரண்டாம் ஆள்: இருபது டாலர்.

வியாபாரி: இதோ பாருங்கள்! இவள் வலிமையை (சாட்டையால் அடித்து) நான்கு அடி கொடுத்தேன்; அசைந்தாளா? எத்தனை அடி அடித்தாலும் தாங்குவாள்; என்ன வேலை கொடுத்தாலும் செய்வாள். ஒரு தரம்! இரண்டு தரம்......

மூன்ருவது ஆள்: அறுபது டாலர்!

வியாபாரி: இப்படி ஒரு கூலி — இனி எப்போதும் உங்களுக்குக் கிடைக்க மாட்டாள். இரண்டு ஆண்கள் செய்யும் வேலையை இவள் ஒருத்தியே செய்வாள்; முறுக்கேறிய இவள் கைகளையும் கால்களையும் பாருங்கள் (தடியால் ஒரு தட்டு தட்டிக் காட்டுகிருன்.)

முதல் ஆள்: நூறு டாலர்!

வியாபாரி: நூறு டாலர்! முதல் தரம்; இரண்டு தரம்; மூன்ரும் தரம் நூறு டாலர்; இதோ இந்த நீக்ரோ அடிமை உமக்குச் சொந்தம்; கைவிலங்கும் கால்விலங்கும் போட்டு அழைத்துச் செல்.

முதல் ஆள்: நல்லது!

ஆபிரகாம்லிங்கன்: என்ன கொடுமை? ஆடு மாடுகளை ஏலம் போடுவது போல் — அங்காடியிலே துணிமணிகளை ஏலம் போடுவது போல் — நீக்ரோ பெண் ஏலம் போடப்படுவதா?

இனி இவள் அடிமை; சாகுமட்டும் அடிமை. இந்த அடிமைமுறை ஒழியாதா? இதனை ஒழிக்கவே முடியாதா?

மனிதர் நோக மனிதர் பார்க்கும் இந்த வழக்கம் மாருதா? என்றேனும் ஒருநாள் இந்த அடிமை முறையை ஒழித்துக் கட்டியே தீருவேன். அடிமை முறையை அகற்றுவதே என் இலட்சியம்; என் குறிக்கோள்.

வரலாறு தொடர்ந்தது !

ஆண்டுகள் பல சென்றன ; அமெரிக்க நாட்டுத் தலைவர் தேர்தல் வந்தது. குடியரசுக்கட்சி ஆபிரகாம்லிங்கனை வேட்பாளராக நிறுத்தியது ; தேர்தலில் வெற்றி பெற்றார் லிங்கன்.

விறகு வெட்டியின் மைந்தன் வெள்ளை மாளிகையிலே குடியேறினார். ஆபிரகாம்லிங்கன் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஆனார். அஃது எவ்வாறு முடிந்தது? அதற்கு ஒரே விடை! உழைப்பு! உழைப்பு !! உழைப்பு !!! அஃதீ ஒன்றேதான்.

[இனிவரும் பகுதியை — ஒருவர் மெய்ப்பாட்டு உணர்வோடு படிக்க வேண்டும்; ஆபிரகாம்லிங்கனும் மற்றவர்களும் நடிப்பதுபோல் பாவனை காட்டுதல் வேண்டும்.]

(1)

ஆபிரகாம்லிங்கனின் குடும்பம் நான்கிரீச்சில் இருந்தது. அங்குத் தரமான கல்வி கற்பதற்குப் பள்ளி இல்லை.



லிங்கனே நான்கு மைல் நடந்தே சென்று நல்லதொரு பள்ளியில் கற்றுவந்தார். கல்வியின்மீது லிங்கனுக்கு அத்தனை ஆர்வம்; நான்கு மைல் என்ன? எட்டு மைலும் நடக்கத் தயாராக இருந்தார். அவர் இலட்சியமெல்லாம் படிக்க வேண்டும் என்பதுதான்.

பள்ளி முடிந்து வீட்டிற்கு வருவார்; வீட்டில் ஓய்வு கொள்வாரா? அதுதான் இல்லை. இடைவிடாது படிப்பார்; படித்ததைத் தரையிலே எழுதிப்பார்ப்பார்; மரப் பலகையிலே எழுதிப் பார்ப்பார்.

படிக்கும் புத்தகங்களில் இருந்து குறிப்பு எடுத்து வைத்துக் கொள்வார்.

(2)

தந்தை தாமஸ் லிங்கனோடு ஆபிரகாம் லிங்கனும் வயலுக்கு வேலை செய்யச் செல்வார். அங்கேயும் வேலை பார்த்துக் கொண்டே படிப்பார். தான் படித்ததை மற்றவர்கட்கு எடுத்துச் சொல்வார். இந்தப் பழக்கம் அவருக்கு எழுத்துத் திறமையை வளர்த்தது; பேச்சு ஆற்றலைத் தந்தது.

ஆபிரகாம்லிங்கன் 'கிராபோர்டு' பள்ளியில் படித்தார். அங்கே அவர் பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்றார்; கட்டுரைப் போட்டியில் முதற் பரிசு பெற்றார்; கையெழுத்தில் முதலாவதாக வந்தார். ஆசிரியர்கள் அனைவரும் பாராட்டினர்.

(3)

உழைப்பைத் தவிர வேறொன்றையும் அறியாதவர் ஆபிரகாம் லிங்கன். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் வாஷிங்டன் வரலாறு 'ஜோசியா' என்பவரிடம் இருந்தது. அதைப் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் லிங்கனுக்கு. லிங்கன் வீட்டிற்கும் ஜோசியா வீட்டிற்கும் நாற்பத்துநான்கு மைல் தூரம்; சென்றுவர காசு இல்லை; வண்டி வாகன வசதியும் இல்லை. லிங்கன் விடுவாரா? நடந்தே சென்றார். புத்தகத்தைப் பெற்று வந்தார்; படித்து முடித்தார்.

(4)

தான் படிக்கும் போதே 'அமெரிக்க நாட்டுத் தலைவனாக வர வேண்டும்; அடிமைத் தளையை அகற்ற வேண்டும்.' என்ற உணர்வோடு உழைத்தார் ஆபிரகாம் லிங்கன். ஆயினும் வறுமை அவரை வாட்டியது. அதனால் கூலி வேலைக்குத் தயார் ஆனார்.

லிங்கன் கூலிக்குப் படகோட்டினார். செல்வர் ஒருவர் வீட்டிலே எடுபிடி ஆளாகப் பணி செய்தார். புத்தகக்கடையிலே சிப்பந்தியாக வேலை செய்தார்.

எங்கே இருந்தாலும் எந்த வேலே செய்தாலும் புத்தகப் படிப்பை மட்டும் விட்டாரில்லே.

சட்டப் புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினர்; வாதாடுவதில் பயிற்சி பெற்ருர்; வழக்கறிஞராகவும் உயர்ந்தார்.

இவ்வாறு வாழ்நாள் எல்லாம் உழைத்தார். அந்த உழைப்பின் பெருமைதான் அமெரிக்கக் குடியரசுத் தலேவராக அவரை அமர்த்தியது. ஓயாத உழைப்பே அவருக்கு உயர்வை அளித்தது.

நீயும் இந்த நாட்டின் குடியரசுத் தலேவர் ஆகலாம்; நாடாளும் முதல் அமைச்சர் ஆகலாம்; ஆயின் உனக்கு ஓயாது உழைக்கும் வல்லமை தேவை. அதோ அமெரிக்கக் குடியரசுத் தலேவர் ஆபிரகாம்—உனக்கு வழி காட்டுகிருர்.

காட்சி—2

**இடம்:** வெள்ளே மாளிகை

**இருப்போர்:** ஆப்ரகாம் லிங்கன் (அவர்தம் மனப்போராட்டம்)

**மனம்:** ஆபிரகாம்! உன் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருக்கிறதே ஒன்று; என்ன அது? மறந்து விட்டாயா?

**ஆபிரகாம்:** இல்லே! மறக்கமாட்டேன்; அடிமைகளுக்கு விடுதலே அதுதானே; அதனேக் கொடுத்தே தீருவேன்.

**மனம்:** நீ எதற்காகச் சட்டம் படித்தாய்?

**ஆபிரகாம்:** அடிமை முறையை ஒழிப்பதற்கு வழி காண்பதற்காக.

**மனம்:** நீ எதற்காகச் சட்டசபைக்குள் நுழைந்தாய்?

**ஆபிரகாம்:** இந்த நாட்டுமக்கள் அனேவரும்சமம் என்ற தத்துவத்தை நிலேநாட்ட — நாட்டு பற்ருல்—நாட்டு மக்கள் மீது கொண்ட பற்ருல்.

**மனம்:** நீ எதற்காகத் தலேவராக வந்தாய்?

**ஆபிரகாம்:** அடிமை முறையை அழிக்க-ஒழிக்க. வந்த காரியத்தை இதோ இப்பொழுதே முடிக்கப் போகிறேன். செயலாளரே!

**செயலாளர்:** (உள்ளே வந்து) ஐயா!

**ஆபிரகாம்:** இன்று 1866 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் நாள்—இன்றே விடுதலேப் பிரகடனத்தில் கையெழுத்திடுகின்றேன்.

பதின்மூன்று லட்சம் நீக்ரோவர்களின் விடுதலை முழக்கம் தொடங்கட்டும்; இனி ஏழையென்றும் அடிமை என்றும் எவனும் இல்லை.

[கையெழுத்திடுகிருர்]

நீக்ரோக்கள்: பிறப்புரிமை தந்த பிதாவே வாழ்க! அடிமையர் தந்தையே வாழ்க!

[அமெரிக்கா எங்கும் இந்த முழக்கத்தின் எதிரொலி கேட்கிறது.]

## செய்முறைப் பயிற்சி

1. அமெரிககக் குடியரசில் விறகு வெட்டியின் மகன் தலைவர் ஆனுர். இந்தியக் குடியரசில் நீ தலைவராகும் வாய்ப்பு உண்டு, அதற்காக நீ என்ன செய்வாய்?
2. வசதியும் வாய்ப்புமே ஒருவனை உயர் நிலைக்குக் கொண்டு வரும் என்பதில்லை. ஒருவனுடைய முயற்சியும் நல்ல குணமுமே அவனை உயர் நிலைக்குக் வரும்.

**தெரிந்துகொள்வீர்:**

1866ஆம் ஆண்டு சனவரித் திங்கள் முதல் நாள் அமெரிக்காவில் பதிமூன்று இலட்சம் நீக்ரோக்களின் அடிமைத்தளை அறுத்தெறியப்பட்டது. அது யாரால்? அண்ணல் ஆப்ரகாம்லிங்கனல்.

**நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி**

1. எழுதுவதிலும் பேசுவதிலும் தேர்ச்சி பெற முயற்சிசெய்.
2. திறமையைக் கண்டு பதவிகள் உன்னைத் தேடிவரும்.
3. கற்றது கைம்மண்ணளவு; கற்க வேண்டியது உலகளவு; ஆதலால் இடைவிடாமல் படி.
4. நல்லவற்றை படி; நல்லவற்றைப் பேசு; நல்லவற்றையே செய்.

# 3. தலைமை நீதிபதி

மாணவர்களே! தமிழ் நாட்டின் தலைநகரம் சென்னை. நீங்கள் சென்னைக்குச் சென்றிருக்கிறீர்களா? அங்கே உள்ள அழகான கடற்கரையைக் கண்டு மகிழ்ந்ததுண்டா? சிலர் சென்றிருப்பீர்கள்; சிலர் கண்டிருப்பீர்கள்: மகிழ்ந்திருப்பீர்கள்; சிலர் சென்னையிலேயே வாழ்பவர்களாகவும் இருப்பீர்கள். அங்குள்ள உயர்நீதி மன்றத்தைப் பார்த்திருப்பீர்கள்! அங்கே உயர்ந்து தோன்றும் கலங்கரை விளக்கத்தைக் கண்டிருப்பீர்கள்! தமிழக அரசின் கோட்டையில் நுழைந்ததுண்டா? சட்டசபை நடைபெறும் இடத்தைப் பார்த்தது உண்டா? துறைமுகத்தில் கப்பல் வந்து நிற்கும் காட்சியைக் கண்டது உண்டா? இவற்றையெல்லாம் நீங்கள் காணவேண்டும் என்பதற்காகவே சொல்லுகின்றேன்.

உயர்நீதி மன்றத்திற்குச் சென்றால் அங்கே சிலை வடிவில் காட்சிதரும் ஒருவரை நீங்கள் காணலாம். அவர் தாம் தலைமை நீதிபதி முத்துசாமி ஆவார்.

அவர் செல்வக்குடியில் பிறந்தவரா? சீமான் வீட்டுப் பிள்ளையா என்றால் இல்லை.

எளிய குடியில் பிறந்தவர்; ஏழையின் வயிற்றில் பிறந்தவர்; எப்படி உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதி ஆனார்? உழைப்பு! ஓயாத உழைப்பே அவரை உயர்த்தியது.

**தொடக்கக் கல்வி :**

முத்துசுவாமிக்கு ஐந்து வயதும் நிரம்பவில்லை. அவர் தந்தையார் அவரைத் தவிக்க விட்டுவிட்டு மறைந்தார். தாயாரால் முத்துசுவாமியின் வயிற்றை நிரப்புவதே பெரும்பாடாக இருநதது.

எப்படியோ உள்ளூர்ப் பள்ளியில் சேர்ந்தார். தொடக்கக் கல்வியை முடித்தார். பத்து வயதுச் சிறுவனின் புத்தி கூர்மையை ஆசிரியர்கள் பாராட்டினுர்கள்.

சிறுவனின் அடக்க குணம் அவனுக்குப் பெருமையைத் தேடித்தந்தது. அவனுடைய அறிவு அவனுக்குப் பாராட்டுதலைப் பெற்றுத் தந்தது. பாராட்டுக் கிடைத்தால் போதுமா? படிப்பதற்குப் பணம் வேண்டுமே!

எல்லாம் இருந்து என்ன பயன்? பணம் இல்லாதவர் நடைப்பிணம் தானே! சிறுவன் முத்துசுவாமி வயிற்றுப் பிழைப்புக்கு வழிதேடினுன். அத்துடன் எதையும் கற்கவேண்டும் என்ற ஆவல்; எதையும் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசை-முத்துசுவாமியின் முன்னேற்றத்திற்கு வழி வகுத்தது.

உத்தியோகம் கிடைத்தது :

முத்துசாமிக்கும் ஓர் உத்தியோகம் கிடைத்தது. ஊர்க்கணக்கப் பிள்ளையிடம் மாதம் ஒரு ரூபாய்ச் சம்பளத்தில் உத்தியோகம். முத்துசுவாமி பெருமகிழ்ச்சி அடைந்தான்.

கணக்கப்பிள்ளை இட்ட வேலையைத் தட்டாமல் செய்தான். அவன் அடிக்கடித் திருவாரூர் செல்ல வேண்டியிருந்தது; அங்குள்ள தாசில்தாரிடம் கணக்கப்பிள்ளை கொடுக்கும் கடிதங்களைக் கொண்டுபோய்க் கொடுக்கவேண்டியிருந்தது.

முத்துசுவாமி தாசில்தாரை அடிக்கடி சந்தித்தான்.

சிறுவனின் தோற்றம் தாசில்தாரைக் கவர்ந்தது; அவன் பேச்சு, அவனிடம் அன்பு காட்டச் செய்தது. அவன் சுறுசுறுப்போ தாசில்தாரை மகிழச்செய்தது; ஒரு நாள்...



காட்சி 1

இடம் : தாசில் தார் வீடு

இருப்போர் : தாசில்தார், முத்துசுவாமி, தாசில்தார் மனைவி, தாசில்தார் மைத்துனன்.

நிகழ்ச்சி : தாசில்தாரின் வீட்டுத் திண்ணையில் அமர்ந்தபடியே முத்து சுவாமி படித்துக் கொண்டிருக்கிருன்; தாசுல்தார் வீட்டின் உள்ளே இருந்து வெளியே வருகின்ருர்.

**தாசில்தார் :** யாரப்பா அது? முத்துசுவாமியா? ஏன் வெளியே உட்கார்ந்துவிட்டாய்!

**முத்து :** ஐயா வணக்கம்! ஐயா அவர்கள் உள்ளே பேசிக் கொண்டிருந்தீர்கள். அனுமதி இல்லாமல் உள்ளே வருவது தவறு என்று கருதினேன்; அதனுல் இங்கேயே உட்கார்ந்து விட்டேன்.

**தாசில் :** நல்லது. அஃது உன் உயர்ந்த குணத்தைக் காட்டுகிறது. அஃது என்ன கையில் புத்தகம்?

**முத்து :** எனக்கு ஆங்கிலம் படிக்க வேண்டும் என்று ஆசை; அதனுல் நாஞகவே...

**தாசில் :** நீயாகவே-ஆசிரியர்.........இல்லாமலேயே.........கற்கத் தொடங்கிவிட்டாயா? எங்கே What is your name?

**முத்து :** My name is Muthusamy.

**தாசில்தார் :** very good [தாசில்தார் தம்மனைவியை அழைத்தார்] கற்பகம் இங்கே வா! இவனைப்பார்! எப்படி இருக்கின்ருன்?

**கற்பகம் :** யார் முத்துசுவாமியா? அவனுக்கென்ன? அழகு சொட்டுகிறது; அறிவும் சொட்டுகிறது. ராஜா வீட்டுப்பிள்ளை போல் இருக்கின்ருனே!

**தாசில் :** உன் தம்பியோடு இவனையும் படிக்க வைத்தால் என்ன?

**கற்பகம் :** நானே உங்களிடம் சொல்ல நினைத்தேன். நீங்கள் நாயக்கராகப் பிறந்து வீட்டீர்கள்; இவன் பிராமணப் பிள்ளை

யாகப் பிறந்து விட்டான். இவனுக்கும் உங்கள் பெயர்தானே! இவனைப் படிக்க வைத்தால் .........

தாசில்: என்னைப் போல் தாசில்தாராக வருவான் என்கிறாயா? அது தான் முடியாது! என்னைவிட இவன் பெரிய பெரிய பதவி களைப் பெறுவான்!

முத்து: ஐயா, அம்மா!
[காலில் விழுந்து வணங்குகின்றான்]

தாசில்: நலமாக இரு அப்பா! முத்து! நாளையிலிருந்து உனக்கு வேலை இல்லை; ஆனால் சம்பளம் உண்டு; நாளையிலிருந்து நீ பள்ளிக்குச் சென்று படிக்க வேண்டும். காலையிலும் மாலை யிலும் நீ என்னிடம் ஆங்கிலப் பாடம் கேட்க வர வேண்டும். ஒழுங்காப் படிக்கவேண்டும்; உன் அம்மாவிடம் சொல்லி விட்டுவா!

முத்து: ஐயா, நான் உங்களுக்கும் அம்மாவுக்கும் எவ்வாறு நன்றி சொல்வேன்.

தாசில்: நன்றி சொல்ல வேண்டாம்; உன் அறிவும் ஒழுக்கமும் முயற்சியுமே உன்னை உயர்த்துகிறது. இதோ இவன் என் மைத்துனன்; இவனோடு நீயும் பள்ளிக்குச் செல்லலாம்; படிக் காலம்; மகிழ்ச்சியோடு சென்று வா.

* * *

மனம் உண்டானால் மார்க்கமும் உண்டு.

முத்துசுவாமி ஒரு சிறு குடிசையில்தன் தாயாரோடு வாழ்ந்தான்; படுக்கவும் சமைக்கவுமே பற்றாத குடிசை; படிப்பதற்கு அந்தக் குடிசை எங்கே இடம் தரும்?

முத்துசுவாமி பகலில் தென்னந் தோப்புகளில் உட்கார்ந்து படிப்பான்; வாய்க்கால் கரைகளில் நின்றுகொண்டே படிப்பான். அவன் கையில் எப் போது பார்த்தாலும் ஏதாவது ஒரு புத்தகம் இருக்கும். எப்போது பார்த்தாலும் ஏதாவது ஒரு பாடத்தை அவன் வாய் முணுமுணுத்துக் கொண்டிருக்கும்.

இரவு நேரம்; படிக்க விளக்கு வேண்டுமே! முத்துசுவாமி கவலைப்படமாட்டான்; தெரு விளக்குக்

கம்பங்களில் • அமைதியாக உட்கார்ந்து விடுவான்; பொழுது விடிவது தெரியாமலேயே படித்துக் கொண்டிருப்பான்.

ஒவ்வொரு வகுப்பிலும் முத்துசுவாமி முதல் மாணுக்கனுகத் தேர்ச்சி பெற்ருன். அவனுடய ஆங்கில அறிவை ஆசிரியர் பலரும் பாராட்டினர்.

தலைமை ஆசிரியர் பவுல் • ஏழை மாணவன் முத்துசாமிக்கு உதவி செய்ய விரும்பினுர். பெரு முயற்சி செய்து அரசாங்கத்திடம் இருந்து உபகாரச் சம்பளம் பெற்றுத் தந்தார்.

முத்துசுவாமியின் வறுமையை அ∴து ஒருவாறு போக்க உதவியது. பெற்ற தாயின் மனமும் மகிழ்ந்தது

சென்னையில் கட்டுரைப் போட்டி ஒன்று நடை பெற்றது. அந்தப் போட்டியில் பங்கு கொண்டான் நம் முத்துசுவாமி.

போட்டியின் முடிவு வெளிவந்தது. நம் முத்து சுவாமி முதல் பரிசு பெற்ருன். முதல் பரிசுக்கான தொகை ரூபாய் ஐந்நூறு முத்துசுவாமிக்குக் கிடைத்தது.

முத்துசுவாமியின் முயற்சி அவருக்கு வெற்றி தேடிதந்தது; அவர்தம் ஓயாத உழைப்பு அரசாங்க உதவியைத் • தேடி தந்தது. கல்லூரியில் சேர்ந்து படித்தார்! பி.ஏ. பட்டம் பெற்ருர்.

அரசு அவர்தம் திறமையைப் பாராட்டி உத்தி யோகம் கொடுத்தது.

அவர் தம் ஊக்கமும் உழைப்பும் உயர் பதவி பெறச் செய்தது. மாவட்ட ஆட்சித்தலைவர் ஆனுர். அடுத்து மாவட்ட நீதிபதியும் ஆனுர்.

திரு முத்துசுவாமியின் நேர்மையும் நீதியும் அவரை உயர்நீதி மன்றத் தலைமை நீதிபதியாக உயர்த்தியது.

மாணவர்களே! "உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ? இல்லை. ஊக்கத்துடன் உழைப்பவர்க்கு ஆக்கம் தானாகவே வந்து சேரும்.

செய்முறைப் பயிற்சி

1. உங்களுக்குத் தெரியுமா? தேசத் தொண்டர் கோபால கிருஷ்ண கோகுலே தன் இளமைப் பருவத்தில் எப்படிப் படித்தார் தெரியுமா?

   எண்ணெய் வாங்குவதற்குக் காசு போதவில்லை; தன்னைப் படிக்க வைக்கும் அண்ணனுக்கு மேலும் மேலும் தொல்லை தர அவர் விரும்பவில்லை.

   அதனால் தெரு விளக்கின் உதவியை நாடினார்; அந்த வெளிச்சத்தில் படித்தார்.

   அவர் உலகம் போற்றும் பேராசிரியராக விளங்கினார்; உத்தமர் காந்தியால் குருவாகக் கொள்ளப்பட்டார்; தன்னல மற்ற தியாகியாக விளங்கினார்.

2. நம் நாட்டை அன்னியர்கள் ஆண்டார்கள். அவர்கள் காலத்தில்—படிக்க வேண்டுமென்றால் பட்டணத்திற்குச் சென்றுதான் படிக்க வேண்டும்; சம்பளம் கட்டித் தான் படிக்க வேண்டும்.

   இப்போது நீ படிப்பதற்கு எல்லாவசதிகளும் உண்டு. எல்லா நகரங்களிலும் கல்லூரிகள் உண்டு; எல்லா ஊர்களிலும் பள்ளிகள் உண்டு.

   நீ சம்பளம் கட்ட வேண்டாம்; ஒருவேளை உணவும் அரசாங்கம் உனக்குத் தருகிறது; இலவசமாகப் புத்தகமும் தருகின்றது; உன் கடமை என்ன? நன்றாகப் படிப்பதுதான்.

**நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி :**

1. இளமையிலேயே கற்க வேண்டும்.

2. இடைவிடாமல் கற்கவேண்டும்.
3. ஒழுக்கத்தோடு நடந்து கொள்ள வேண்டும்.
4. பெரியவர்கள் உன்னை விரும்பும்படி நடந்து கொள்ள வேண்டும்.

## 4. பாரதப் பிரதமர்

பாரத நாட்டின் முதல் பிரதமர் பண்டித நேருவே ஆவர்: அவர் மறைந்ததும் இரண்டாவது இந்தியப் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் லால்பகதூர் சாஸ்திரி ஆவர்.

லால்பகதூர் சாஸ்திரி செல்வக் குடியிலே பிறந்தவர் அல்லர், ஆயினும் அவர் தம் உழைப்பும் ஊக்கமும் அவரை நம் நாட்டின் பிரதமராக உயர்த்தியது.

நம் நாடு ஜன நாயக நாடு. நம் நாட்டை நாமே ஆட்சி செய்கிறோம். உழைப்பும் உறுதியும் இருந்தால் நாமே உயர முடியும் ; சாஸ்திரியைப் போல் பிரதமராகவும் வர முடியும்.

சாஸ்திரி அவர்களின் வாழ்க்கையே இளைஞர்களுக்கு வழி காட்டுவதாகும்.

அக்டோபர் இரண்டாம் நாள் காந்தியின் பிறந்த நாள் ; அக்டோபர் இரண்டுதான் சாஸ்திரி பிறந்த நாளும். இவர் தந்தையார் சாரதா பிரசாத்; தாயார் இராம் துலாரி. வருவாய் போதாத குடும்பம்; அதனால் அவர்களிடம் வறுமை குடி கொண்டிருந்தது.

சாஸ்திரிக்கு ஒன்றரை வயது; அப்போது அவர் தந்தை இறந்துவிட்டார். சாஸ்திரி குடும்பம் அவர் தாத்தா வீட்டில் குடியேறியது. அதுவும் பெரிய குடும்பம்; வருமானமோ குறைவு; அதனால் சாஸ்திரி பல நாள் பட்டினி; சில நாள் ஒரு வேளை உணவு; இதுதான் அவர் எழிலான இளமைப் பருவம்.

**விளையாட்டில் விருப்பம்**

விளையாட்டில் விருப்பம் கொண்டவர் சாஸ்திரி பந்து வாங்கக் காசுக்கு எங்கே போவார்? பழம் பூக்களைப் பொறுக்குவார்; துணியில் வைத்துப் பந்தாகக் கட்டுவார்; ஏழைச் சிறுவர்களோடு சேர்ந்து ஆடி மகிழ்வார்.

நாடகங்களில் நடிப்பதில் சாஸ்திரிக்கு விருப்பம் அதிகம்; பள்ளி நாடகங்களில் நடித்திருக்கிறார்.

பேச்சுப் போட்டியில் அவரை எவராலும் வெல்ல முடியாது. பொதுப்பணி ஆற்றுவதில் ஆர்வம் கொண்டவர்; அதனால் சாரணர் இயக்கத்தில் பங்கு கொண்டார்.

சாஸ்திரி ஏழையாகத்தான் பிறந்தார்; செல்வத்தைப் பெறவில்லை. ஆயினும் மற்ற எல்லாத் திறமைகளையும் பெற்றிருந்தார்.

பள்ளியில் படிக்கும் போது அவர் ஆங்கிலத்தையும் வரலாற்றையும் விரும்பிக் கற்றார். பள்ளி ஆசிரியர்கள் அவருடைய ஆங்கில உச்சரிப்பைப் பாராட்டி மகிழ்வது உண்டு.

**காசியில் :**

சாஸ்திரி பிறந்த ஊர் முகல்சராய்; அவ்வூரில் உயர்நிலைப் பள்ளி இல்லை. அதனால் காசிக்குச் சென்று தாய்மாமன் வீட்டில் தங்கிப் படித்தார்.

அப்போது காசிக்குப் பக்கத்து ஊரில் திருவிழா நடந்தது; திருவிழாவுக்குச் சாஸ்திரி தம் நண்பர்களோடு சென்றார்.

திருவிழா நடைபெற்ற ஊருக்குக் கங்கையைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது; போகும்போது

படகில் ஏறிச் சென்றுவிட்டார்; வரும்போது காசு இல்லை. உடன் வந்தவர்கள் படகில் ஏறிவிட்டனர்.

சாஸ்திரி என்ன செய்தார் தெரியுமா? கங்கை ஆற்றை நீந்திக் கடந்தார்.

இத்தகைய வறிய நிலை இருந்தாலும் கற்பதில் மட்டும் அவர் கவனக் குறைவாக இருந்ததே இல்லை. நேர்மையில் அவர் என்றும் தவறியதே இல்லை. உண்மையும் ஒழுக்கமுமே அவர் தம் சிறந்த அணி கலன்கள்.

நாட்டுப் பற்றே அவர் உயிர் மூச்சு.

ஓயாத உழைப்பே அவரை இந்திய நாட்டின் பிரதமராக உயர்த்தியது. அவர்தம் வரலாற்றை அடுத்த வகுப்புகளில் விரிவாகக் கற்பீர்கள்.

மாணவர்களே! ஒருவரின் உயர்வுக்குச் செல்வம் காரணம் ஆவது இல்லை; உழைப்பே முதற் காரணம். ஆதலால் உழைத்துப் படியுங்கள்! உயர்வு பெறுவீர்கள்! உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?

## செய்முறைப் பயிற்சி

மாணவர்களே!

1. சாஸ்திரியார் இளமையிலே ஆங்கில மொழியைத் தெளிவாக உச்சரிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார். அதனால் ஆசிரியர்களால் பாராட்டப்பட்டார். அவரைப் போல நீங்களும் மொழியைத் தெளிவாகப் பேசிப் பழக வேண்டும்.
2. சாஸ்திரியார் எளிய வாழ்க்கையே வாழ்ந்தார்; அவரைப்போல நீங்களும் எளிமையாக வாழ வேண்டும்.
3. சாஸ்திரியார் கடமையில் கண்ணும் கருத்துமாக இருந்தார்; அதனால் பதவி அவரைத் தேடி வந்தது. நீங்களும் கடமையைச் செய்யுங்கள்; உரிமையைப் பெறுவீர்கள்.

# IV. சுய கட்டுப்பாடு

## 1. சுய கட்டுப்பாடு என்றால் என்ன?

காந்தி இலண்டனில் படித்துக் கொண்டிருந்தார். அவர் தமையனார் அவருக்குத் தேவையான பணத்தை அனுப்பிக்கொண்டிருந்தார்.

காந்தி விரும்பினல் எப்படி வேண்டுமானுலும் நடக்கலாம். படிப்பதையே விட்டுவிட்டு ஊரைச்சுற்றி இருக்கலாம். வீண் செலவு செய்து கொண்டு பொழுதை இன்பமாகக் கழித்திருக்கலாம்.

ஏனென்ருல் அவரை அங்கு ஏன் என்று கேட்பதற்கு யாரும் இல்லை. அவரைக் கட்டுப்படுத்துவதற்கு எவரும் இல்லை.

ஆயினும் காந்தி சுய ஒழுங்கைக் கடைப்பிடித்தார்; சுய கட்டுப்பாட்டோடு வாழ்ந்தார்.

தனக்குத் தானே வரையறுத்துக் கொள்ளும் ஒழுங்குமுறைகளே சுய ஒழுங்கு அல்லது சுய கட்டுப்பாடு எனப்படும்.

#### மணவாளன் என்ன செய்வான்?

மணவாளன் பள்ளிக்கூடத்திற்குப் போகிருன்; அவன் தாய் அவனுக்கு நாள்தோறும் இருபது காசுகள் கொடுத்து அனுப்புவாள்.

அவன் அந்த இருபது காசுகளை எப்படி வேண்டுமானுலும் செலவு செய்யலாம்.

மணவாளன் என்ன செய்வான் தெரியுமா? பசித்தால் 'பழம்' வாங்கி உண்பான்; ஆனுல் மற்ற

மாணவர்கள் 'ஐஸ் புரூட்' வாங்குவார்கள்; இவனையும் வாங்கச் சொல்வார்கள்;

ஆனல் மணவாளன் அதை வாங்கவே மாட்டான்; அஃது உடலுக்குத் தீங்கு விளைக்கும்; அதனை மணவாளன் அறிவான். அவன் தாய் அவனுக்குச் சொல்லியிருக்கின்ருர். அதனுல் ஐஸ்புரூட் போன்றவற்றை அவன் வாங்குவதில்லை. அஃது அவனுடைய சுய கட்டுப்பாடு.

நாம் பலரோடும் சேர்ந்து வாழ்கின்ருேம். நமக்கென்று இறைவன் சில சட்டங்களை வகுத்துள்ளான். அந்தச் சட்டங்களை மனசாட்சி வழியாக நமக்கு அறிவுறுத்திக்கொண்டிருக்கிருன்.

நமக்கென்று அரசும் சில சட்ட திட்டங்களை வகுத்துள்ளது; அவற்றின்படி நடப்பது நம் கடமை ஆகிறது.

ஒருவன் தன் வாழ்க்கையில் தன் னலத்தைக் காட்டிலும் சமுதாய நலத்தையே பெரிதும் போற்றவேண்டும். தன் உணர்ச்சிகளுக்கு முதல் இடம் தராமல் பிறர் உணர்ச்சிகளுக்கே முதல் இடம் தருதல் வேண்டும். இதற்குச் சுய கட்டுப்பாடு தேவை.

### செய்முறைப் பயிற்சி

1. நீ வழியில் செல்கிருய்; ஒருவன் உன் மீது மோதுகிருன்; நீ கீழே வீழ்கிருய்; உனக்குக் கோபம் வருகிறது; அடக்கிக் கொள்; ஆறுவது சினம்.
2. உன் புத்தகத்தை வாங்கிப் படித்த உன் நண்பன் அதனைக் கிழித்து விட்டான்! உனக்குக் கோபம்வரும்; எனினும் பொறுத்துக்கொள்; பொறுமை கடலினும் பெரிது.

3. உன்னை ஒருவன் இழிவாகப் பேசுகின்றான்; உனக்கும் அவனை இழிவாகப் பேசவேண்டும் போல் இருக்கிறது. ஆயினும் பேசாதே. யாகாவா ராயினும் நாகாக்க.

நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி :

1. ஆறுவது சினம். 2. பொறுமை கடலினும் பெரிது.
3. யாகாவா ராயினும் நாகாக்க.

## 2. பரிசு உனக்குத்தான்!

அது கிறித்துவக் கன்னியர் நடத்தும் விடுதி. அங்கே நூற்றுக்கணக்கான ஏழைச் சிறுமியர் தங்கிப் படிக்கின்றனர்.

ஏழைச் சிறுமியர்க்கு மாலை நேரத்தில் தின்பண்டம் கொடுப்பது வழக்கம். ஒரு நாள் கடலை உருண்டை; மற்றொரு நாள் கேக்; பிறிதொரு நாள் லட்டு என்று கொடுப்பார்கள்.

மாணவியர் ஒருவரோடு ஒருவர் முந்திக்கொண்டு தின்பண்டத்தை வாங்கி உண்பர். எவ்வளவுதான் மடத்துச் சகோதரிகள் மாணவியரை வரிசைப்படுத்தினாலும் ஒவ்வொரு மாணவியும் வரிசையில் முந்திக் கொள்ளவே விரும்புவர். ஒருவரோடு ஒருவர் மோதிக் கொண்டே தின்பண்டங்களைப் பெறுவர்.

ஆயினும் ஒரு சிறுமி மட்டும் நாள்தோறும் கடைசியாகவே தின்பண்டத்தைப் பெறுவாள்; அமைதியாக உண்பாள். அவள் பெயர் மேரி.

அவள் படிப்பிலும் கெட்டிக்காரி; பண்பிலும் சிறந்தவள்; அடக்கமாகப் பேசுவாள்; அழகான தோற்றமும் அவளுக்கு இருந்தது.



பத்து வயதுடைய சிறுமிக்கு எவ்வளவு பக்குவமான மனம். ஒரு நாள் கூட அவள் வரிசையில் முந்திக்கொள்ளவில்லை. அந்த விருப்பமும் அவளுக்கு இருப்பதாகவே தெரியவில்லை.

ஒரு நாள் மடத்துச் சகோதரி எல்லா மாணவியருக்கும் 'லட்டு' கொடுத்துக் கொண்டிருந்தார். அன்றும் மேரி அமைதியாக வந்தாள்; கடைசியாக வந்தாள். லட்டைப் பெற்றுக்கொண்டாள்.

லட்டை உண்ணுவதற்தாக எடுத்தாள் மேரி; அதன் உள்ளே ஒரு சிறு தங்க மோதிரம்; வியப்பால் அவள் கண்கள் விரிந்தன.



"சகோதரி! இதோ பாருங்கள்! இந்த லட்டில் ஒரு தங்க மோதிரம்!" மேரியின் கைகள் மோதிரத்தை எடுத்துக் காட்டின. அவளை அறியாமலேயே மோதிரம் சகோதரியின் கைக்குச் சென்றது.

"மேரி! உன் சுயகட்டுப்பாடு என்னை மகிழ் வித்தது; நம்முடைய தவத்திரு தாயாரையும் மகிழ் வித்தது; அவர்கள் அளித்த டரிசுதான் இது இந்தப் பரிசு உனக்குத்தான்; வைத்துக்கொள்; உனக்கு என் பாராட்டு." என்று கூறி வாழ்த்தினர் சகோதரி.

மாணவர்களே! உங்களுக்கும் இத்தகைய பரிசு களைக் கொடுக்க இறைவன் காலம் பார்த்திருக்கிறன். சுய ஒழுங்கே அந்தப் பரிசினை உங்களுக்குப் பெற்றுத் தரும். எப்போது பெறப்போகிறீர்கள்?

## செய்முறைப் பயிற்சி

1. உன் வகுப்பில் நாற்பது மாணவர்கள் இருக்கிறார்கள்; வகுட்புப் பாட நூல்கள் கொண்டுவரப்படுகின்றன; அதில் 39 நூல்களே உள்ளன. நீ என்ன செய்வாய்?
2 விழா முடிந்து மிட்டாய் கொடுக்கிறார்கள்; வரிசை யில் நிற்பாயா? முந்திக்கொள்ள எண்ணுவாயா?
3. ஆசையை அடக்கு என்று புத்தர் போதித்தார். ஆதலால் அற்ப ஆசைகளை அடக்கு. முறைப்படி கிடைக்க வேண்டியது கிடைத்தால் போதும்.

**நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி :**

உழைப்பினைக் கொடுக்க முந்திக் கொள்.

பிறர் உதவியைப் பெற முந்திக் கொள்ளாதே.

# 3. இங்கிலாந்தில் காந்தி

"மது உண்ணமாட்டேன் ; மாமிசத்தைத் தொட மாட்டேன் ; பிற பெண்களோடு அலையமாட்டேன்' இந்த மூன்று வாக்குறுதிகளைக் காந்தி, தன் அன்னை யாருக்குக் கொடுத்திருந்தார். அந்த வாக்குறுதிகளை நம்பியே அவர் அன்னை, காந்தியை இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்தார்.

இங்கிலாந்துக்குச் சென்றவுடன்தான் இந்த மூன்று வாக்குறுதிகளையும் காப்பது எவ்வளவு கடினம் என்பது காந்திக்குப் புரிந்தது.

"காந்தி ! இது குளிர் மிகுதியாக உள்ள நாடு" இங்கு மது அருந்தாமல், மாமிசம் உண்ணுமல் வாழ முடியாது" என்று நண்பர்கள் வற்புறுத்தினர்.

காந்தியாரை எப்படியாவது புலால் உண்ணச் செய்ய வேண்டும் என்று அந்த நண்பர்கள் படாதபாடு பட்டனர். அதனுல் விருந்துகளுக்கும் ஏற்பாடு செய்தனர்.

ஆனுல், காந்தி கடைசி வரை மாமிசம் உண்ண வில்லை ; மது அருந்தவில்லை.

"மாமிசம் உண்ணுவது சரியோ தவறே ; அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. என் தாயாருக்கு நான் கொடுத்த வாக்குறுதிகளை நான் காப்பாற்ற வேண்டும்" இதுவே காந்தியின் பதில்.

மாணவர்களே ! நீங்களும் சுயகட்டுப்பாட்டு உணர்வோடு வாழ வேண்டும். கொடுத்த வாக்குறுதி யைக் காப்பாற்ற வேண்டும்.

சீமைப் படிப்பு என்ருலே செலவு மிகுதியாகும். ஆனுல் காந்திக்கோ அடிக்கடி அவர் குடும்ப நினைவு வரும்; குடும்பத்தின் பொருளாதார நிலை ஞாபகத்துக்கு வரும். தன் நிலைமைக்கு மேல் செலவு செய்வதாக உணர்வார்.

அதனுல் செலவுகளைக் குறைக்கத் தொடங்கினுர். இரண்டு அறைகளை வாடகைக்கு எடுத்திருந்தார். இப்போது ஒன்றை மட்டுமே வைத்துக் கொண்டார்.



ஸ்டவ் ஒன்று வாங்கினுர்; பகல் உணவைத் தாமே தயாரித்துக் கொண்டார் ''ருசிக்கு அன்று; பசிக்கே உணவு'' என்ற கொள்கையோடு சமையல் வேலையைத் தொடங்கினுர்; அதில் வெற்றியும் பெற்ருர். இவ்வாறு தன் சுய ஒழுங்கு காரணமாகத் தன் செலவைக் குறைத்துக் கொண்டார்.

இத்தகைய சுய கட்டுப்பாட்டு உணர்வினால்தான் காந்தி, உலகம் போற்றும் உத்தமர் ஆனார்.

மாணவர்களே! நீங்களும் சுய கட்டுப்பாட்டோடு வாழப் பழகுங்கள். உலகம் போற்றாவிட்டாலும் ஊர் போற்றும்.

செய்முறைப் பயிற்சி

1. காந்தி சுய கட்டுப்பாட்டோடு வாழ்ந்தது எவ்வாறு ?
2. காந்தி செலவு செய்வதில் எவ்வாறு தன்னைக் கட்டுப் படுத்திக் கொண்டார் ?
3. நீ ஏழை? உன் நண்பர்கள் செல்வர்கள் ; அவர்கள் கண்ட பொருள்களையெல்லாம் வாங்குகின்றனர் ; உன்னிடம் காசு இல்லை, நீ என்ன செய்வாய் ?

**நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி :**

1. வாக்குறுதியைக் காப்பாற்று.
2. வரவு அறிந்து செலவு செய்.
3. சிக்கனமாகச் செலவு செய்.

# 4. குடிமைப் பண்பு

ஆற்றிலே தண்ணீர் பெருக்கெடுத்து வருகிறது அப்படியே விட்டுவிட்டால் என்ன ஆகும்?

கரை புரண்டு ஓடிய வெள்ளம் எதற்கும் பயன் படாது. கரையை உடைத்துக் கொண்டு கண்ட இடமெல்லாம் பாயும் அல்லது எதற்கும் பயன் படாமல் கடலில் சென்று சேரும்.

தண்ணீர் பயன்பட வேண்டுமென்றால் கரையை உயர்த்த வேண்டும் ; ஆற்றின் குறுக்கே அணையைக்

கட்டி நீரைத் தேக்க வேண்டும்; கால்வாய்களின் வழியாக நிலத்திற்குப் பாய்ச்ச வேண்டும்.

நாம் உரிமை பெற்றிருக்கிறோம்; உண்மைதான். அந்த உரிமை நம் விருப்பப்படியெல்லாம் நடப்பதற்காக அன்று. அந்த உரிமையையும் சில கட்டுப்பாடுகளோடுதான் நாம் அனுபவிக்க வேண்டும்.

கட்டுப்பாடுகளோடு கூடிய உரிமை வேண்டுதல் தான் குடிமைப் பண்பாகும்.

குடிமைப் பண்பை உணராதவன் வாழ்வு சீரழிந்து போகும்.

நாம் நடந்து செல்லும் சாலை நமக்கும் சொந்தமானதுதான். அதில் எங்கு வேண்டுமானாலும் நடந்து செல்ல நமக்கு உரிமை உண்டு.

உரிமை காரணமாகச் "சாலையின் நடுவேதான் நான் நடப்பேன்" என்று கூறி ஒருவன் நடக்கத் தொடங்கினால் அவன் கதி என்ன ஆகும்? விரைவு வண்டிகள் வரும்; அவன்மீது மோதும்; அவற்றால் அடிபட்டு விழ நேரும்.

சாலையில்நடக்க நமக்கு உரிமை உண்டு; அத்துடன் நடைபாதையில் நடக்க வேண்டும் என்ற கட்டுப்பாடும் நமக்கு உண்டு. இந்த உணர்வு ஒவ்வொருவருக்கும் இருத்தல் வேண்டும்.

### செய்முறைப் பயிற்சி

1. புகைவண்டியில் பயணம் செய்ய நம்மிடம் டிக்கெட் இருக்கிறது. அதனால் நான்குபேர் உட்காருகின்ற இடத்தில் நாம் படுத்துக் கொள்ளலாமா?

   நமக்கென்று ஒதுக்கப்பட்ட இடத்தில் நாம் அமர வேண்டும்; மற்றவர்களுக்கு உரியதை மற்றவர்களுக்கு விடுதல் வேண்டும்.

2. படிப்பதற்குச் செல்கிறோம்; அங்குப் பல பத்திரிகைகள் இருக்கும்; நாம் ஏதாவது ஒன்றைத்தானே எடுத்துப் படிக்கவேண்டும். எல்லாவற்றையும் நாமே எடுத்துவைத்துக் கொள்ளலாமா? கூடாது.

**நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி:**

உன் உரிமையை நீ பெறுவதில் தவறு இல்லை; ஆனால் மற்றவர் உரிமைகளைப் பறிக்கக் கூடாது.

## 5. தன்முறை வரும் வரை காத்திரு!

(1)

உன் வகுப்பில் வருகைப் பதிவு ஏடு இருக்கும். அதில் அகர வரிசைப்படி பெயர்கள் எழுதப்பட்டிருக்கும்.

வகுப்பு ஆசிரியர் கட்டுரை ஏடுகளைக் கொடுக்கிறார். எவ்வாறு கொடுப்பார்? பெயர் வரிசைப்படித் தானே கொடுப்பார்!

உன் பெயரை அழைத்துக் கட்டுரை ஏட்டினைக் கொடுக்கும்வரை நீ காத்திருக்க வேண்டும். அதுதான் ஒழுங்குமுறை.

தன் முறைவரும்வரை காத்திருப்பதே சுய ஒழுங்கு முறை ஆகும்.

(2)

பள்ளியின் இடைவேளை மணி அடிக்கிறது. வரிசையாக ஒவ்வொருவராக வெளியே செல்வது தான் முறை; அம்முறையை விடுத்து முந்திக் கொண்டு செல்லுதல் முறை ஆகாது. முந்திக் கொண்டு சென்றால் ஒருவரோடு ஒருவர் மோதிக்

கொண்டு விழுவீர்கள். பார்ப்பவர்களுக்கு அது அநாகரிகமாகத் தோன்றும்; மாணவர்கட்கு அஃது அழகன்று.

(3)

எறும்புகளைப் பார்த்திருக்கிறாயா? அவை எங்கே செல்வதாக இருந்தாலும் வரிசையாகத்தான் செல்லும் வரிசையை விட்டு மாறிச் செல்லும் வழக்கமே அவற்றிடம் இல்லை.

சிறு உயிராகிய எறும்பும் வரிசை முறையைக் கைக் கொள்ளுகின்றன. ஆறறிவு படைத்த நாம் அந்த முறையைக் கைக்கொள்ள வேண்டாமா? கண்டிப்பாகக் கைக்கொள்ள வேண்டும்.

### செய்முறைப்பயிற்சி

1. உன் பள்ளியின் சீருடை யாது?

   அந்த உடையோடு நீ தவறாமல் பள்ளிக்கு வருதல் வேண்டும். சீருடை தூய்மையாக இருக்க வேண்டும்; மடிப்பு கலையாமல் வைத்துக்கொள்ள வேண்டும்.

2. உன் பள்ளி ஒன்பது மணிக்குத் தொடங்குகிறதா? நீ எட்டே முக்கால் மணிக்குப் பள்ளியில் தயாராக இருக்கவேண்டும்.

3. பிற்பகல் நான்கு மணிக்கு விளையாட்டு உண்டா? அதில் நீ பங்கு கொள்ளவேண்டும்.

4. இன்று கொடியேற்று விழாவா? அதில் நீ கலந்து மகிழவேண்டும்.

இவை அனைத்தும் உன் கடமைகள்.

நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி :

1. எதிலும் உன் முறை வரும்வரை காத்திரு.
2. பொறுத்தார் பூமி ஆள்வார்.

# 6. கந்தப்பன் வழிகாட்டுகிறுன்

பேருந்து நிற்கும் இடம்; பெண்களும் ஆண்களுமாக ஏராளமானவர்கள் நின்று கொண்டிருக்கின்றனர்.

கூட்டம் மிகுதி; பேருந்தில் இடம் கிடைக்குமா? என்ற ஐயம் எல்லாருக்கும். எல்லாரும் வரிசையில் நிற்பதற்காக ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டிருந்தனர்.

கந்தப்பன் என்ன செய்தான் தெரியுமா? வரிசையின் கடைசியில் நின்றுன்; பொது இடங்களில் நாகரிகமாக நடந்து கொள்ள வேண்டும் என்பது அவன் ஆசிரியர் சொல்லிக்கொடுத்த முதற் பாடம்; அதை அவன் மறக்கவில்லை.

பேருந்து வந்தது; வரிசை கலைந்தது. பெண்களை முந்திக் கொண்டு ஆண்கள் வண்டியில் ஏறினர்.

ஒரு பெண் கைக் குழந்தையோடு ஏறினுள் அவளைத் தள்ளிவிட்டு ஆண்மகன் ஒருவன் வண்டியில் ஏறினுன். அவ்வாறு செய்தல் தகுமா?

பெண்களுக்கு முதலிடம் தருதல் வேண்டும்; அதுவும் கைக்குழந்தையோடு பேருந்தில் ஏறும் பெண்களுக்கு நாம் உதவி செய்ய வேண்டும்.

கந்தப்பன் சிறுவன்; அவனுல் என்ன செய்ய முடியும்? ஒழுங்கு முறை தெரியாத அந்த ஆண்மகனுக்காக வருத்தப்பட்டான்.

கடைசியாக அவன் வண்டியில் ஏறினுன். என்ன வியப்பு? வண்டியில் அவனுக்கும் இடம் இருந்தது.

செய்முறைப் பயிற்சி

1. நீ பேருந்தில் உட்கார்ந்திருக்கிறாய். கிழவி ஒருத்தி வண்டியில் ஏறுகிறாள்; உட்கார இடம் இன்றி நிற்கிறாள்; நீ என்ன செய்வாய்?
2. நீ பங்கீட்டுக் கடைக்குக் கோதுமை வாங்கச் செல்கிறாய். வாங்குவோர் வரிசையாக நிற்கின்றனர். கடைக்காரரர் உன் சொந்தக்காரர்; நீ விரும்பினால் முதலாவதாகக் கோதுமை வாங்க முடியும். நீ என்ன செய்வாய்?

நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி:

1. பொறுத்திரு; காத்திரு.
2. பொறுமை பெருமை தரும்.

## 7. மல்லிகா வரிசையில் நிற்கிறாள்

திருச்சி சந்திப்பு; அங்கே இருந்து மதுரை செல்ல வேண்டும். மல்லிகாவும் அவள் தாயும் பயணம் செய்ய வேண்டியவர்கள்.

பயணச் சீட்டுக் கொடுக்குமிடத்தில் கூட்டம் அதிகம்; பயணச் சீட்டு வாங்குவதற்கு ஒருவரை ஒருவர் தள்ளிக்கொண்டு சென்றார்கள். எவரும் வரிசையாக நின்று வாங்குவதாகத் தெரியவில்லை;

மல்லிகாவும் பயணச் சீட்டு வாங்க வேண்டுமே! பயணச் சீட்டு வாங்கச் சென்றால் பிடித்துத் தள்ளுகிறார்கள். என்ன செய்வது? வண்டியோ வந்து விட்டது; அது புறப்படுவதற்கு சில நிமிடங்களே உள்ளன.

மல்லிகா என்ன செய்தாள் தெரியுமா? கொஞ்சம் தூரத்தே நின்றுகொண்டிருந்த காவலரிடம் சென்றாள்.

"ஐயா! நான் பயணச் சீட்டு வாங்கவேண்டும்; கூட்டம் அதிகம்; யாரும் வரிசையில் நிற்க மறுக்கிறார்கள்! தாங்கள் கொஞ்சம் உதவி செய்தல் நலம்." என்றாள் மல்லிகா. மல்லிகாவின் மொழி கேட்டுக் காவலர் மகிழ்ந்தார். "சின்ன வயதில் இந்தப் பெண்ணுக்கு எத்தனை அறிவு?" என வியந்தார்.

விரைந்து வந்த காவலர் மக்களை வரிசைப்படுத்தினார். மல்லிகாவும் வரிசையில் நின்றாள். அவளுக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா? பயணச் சீட்டைப் பெற்றதால் மட்டுமன்று; மக்கள் எவ்வளவு பண்போடு வரிசையில் நிற்கிறார்கள் என்பதில் தான்.

மாணவர்களே! பேருந்து நிலையங்கள், புகை வண்டி நிலையங்கள், உணவு விடுதிகள், பங்கீட்டுக் கடைகள் - இவை அனைத்தும் பொதுவிடங்கள். அந்தப் பொதுஇடங்களில் வரிசையாக நின்று பெற வேண்டியதைப் பெறுவதே முறையாகும்.

### செய்முறைப் பயிற்சி

1. நீ கோவைக்கு வந்திருக்கிறாய், அங்கிருந்து வேளாண்மைக் கல்லூரிக்குச் செல்லவேண்டும் யாரிடம் வழி கேட்பாய்?
2. புகை வண்டி நிலையத்தில் பெட்டி, படுக்கையோடு இறங்குகிறாய்; அவற்றை உன்னால் சுமக்க முடியாது; சுமப்பதற்கு யாரை அழைப்பாய்?

**நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி :**

1. முறையாகச் சென்றால் பெற வேண்டியதைப் பெறலாம்.
2. ஒழுங்குக்குக் கட்டுப்பட்டவர்கள் உயர்ந்த நிலையைப் பெறுவர்.

# V. பிறருக்குத் தொண்டு

**அன்பே அடிப்படை**

மனித வாழ்வே அன்பின் அடிப்படையில் நடை பெறுகிறது. அந்த அன்பு பிறரிடத்து இரக்கம் காட்டத் தூண்டுகிறது; இரக்கம் பிறர்க்கு உதவி செய்யத் தூண்டுகிறது.

பிறர் துயரம் கண்டு வருந்தும் இயல்பினர் சான்றோர்; அவர்கள் பிறர்துயரைப் போக்கும் வழியைக் காணுகின்றனர்; பிறருக்குத் தொண்டு செய்கின்றனர்; பிறர் மகிழத் தாமும் மகிழ்கின்றனர்.

நாம் தனியொரு மனிதனுக்கும் உதவலாம்; ஒரு பெரிய சமுதாயத்துக்கும் உதவலாம். தனியொரு மனிதனுக்குச் செய்யும் தொண்டினைக் காட்டிலும் சமுதாயத்திற்குச் செய்யும் தொண்டே சிறப்புடையதாகும்.

இராமலிங்க அடிகளார், "ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயல்வேண்டும்" என்றார். அன்னை தெரசா அவர்கள் தன்னலம் கருதாமல் உயிர்கட்குத் ஆற்றிய தொண்டுகள் அளவிடற்கரியனவாகும்.

நான்கு முழ வேட்டியும் ஒரு முழத் துண்டுமாகக் காட்சி அளித்த காந்தியடிகள், நம் நாட்டிற்கும் நம் நாட்டு மக்களுக்கும் செய்த தொண்டினை அறியாதார் யார்?

தொழுநோயாளர்கள் மலாக்கா தீவிலே தள்ளப் பட்டார்கள். அவர்களுக்குத் தன் வாழ்நாள் முழுவதும் தொண்டு செய்தாரே தமியான் அடிகள், அவரை இன்றும் இந்த உலகம் பாராட்டிக்கொண்டிருக்கிறதே.

தொழு நோயாளிகளின் துயர் துடைத்த— பிச்சைக்காரர்களின் பேரிழிவு போக்கிய கருணாநிதி களை ஊரும் உலகமும் போற்றுகிறதே.

பிறருக்குத் தொண்டு செய்வதையே தங்கள் வாழ்வின் பயனாகக் கருதியவர்கள் பலர். அவர்களுள் பிளாரன்ஸ் நைட்டிங்கேல், ஆல்பிரட் சுவிட்சர், அண்ணல் காந்தியடிகள் ஆகிய பெரியவர்களைப் பற்றித் தெரிந்துகொள்வோம்.

## 1. பிளாரன்ஸ் நைட்டிங்கேல்

**தொண்டு**

"தொண்டு என்றால் என்ன ?" 'சேவை' என்று பொருள் கூறலாம். சேவை என்றால் நம்மைப் பெற்ற வர்களுக்கா? மற்றவர்களுக்கா? என்ற வினா எழும்.

பெற்றவர்களுக்குச் செய்யும் சேவை கடமை யாகும்; மற்றவர்களுக்குச் செய்யும் சேவையே தொண்டு எனப்படும்.

பிறர்க்குத் தொண்டு செய்யும் பெரும் பணியை ஏற்றவர்கள் பலர்; அவர்களுள் பிளாரன்ஸ்நைட்டிங் கேல் அம்மையாரின் பணி மிகச் சிறந்ததாகும்.

**இளமை**

1910ஆம் ஆண்டு இத்தாலியில் பிறந்தவர் பிளாரன்ஸ் நைட்டிங்கேல்; இவர் செல்வச் சீமானின் செல்வ மகளாகப் பிறந்தார்.

இவர் மிக்க அழகு வாய்ந்தவர்; இங்கிலாந்து மக்களின் உள்ளத்தைத் தன் அழகால் கவர்ந்தவர்.

பிளாரன்சின் தாயார் சிற்றூர்களுக்குச் செல்வார்; ஏழை நோயாளிகளைக் காண்பார்; அவர்கட்கு உதவுவார். பிளாரன்சும் தாயுடன் செல்வார்; தானும் பிறர்க்கு உதவ வேண்டும் என்று எண்ணுவார்; விளையாட்டுப் பொம்மைகளுக்கும் நாய், பூனை போன்ற விலங்குகளுக்கும் மருத்துவ உதவி செய்து மகிழ்வார்.

மருத்துவம் செய்தார்

பிளாரன்சுக்கு வயது எட்டு. அப்போது ஒரு நாயின் கால் ஒடிந்து விட்டது. பிளாரன்ஸ் என்ன செய்தார் தெரியுமா? அந்த நாயின் கால்களுக்கு மருந்து வைத்துக் கட்டினார்; நாள் தோறும் அதைக் கவனித்தார்; அதன் கால்களைக் குணப்படுத்தினார். இவ்வாறு இளமையிலேயே பிற உயிர்களுக்கு உதவும் பெருமையைப் பெற்றுவிட்டார்.



பிளாரன்சுக்கு வயது பதினாறு ஆயிற்று. ஏழை எளியவர்களுக்கு உதவுவதையே அவர் உள்ளம் நாடியது. அதனால் கிறித்துவக் கன்னியர்களால்

நடத்தப்பெற்ற மருத்துவமனையில் பணியாற்றுவதை விரும்பினார். பெற்றோர்கள் தடுத்தும் பயனில்லை.

மருத்துவப் பயிற்சி பெற்ற பிளாரன்ஸ் இலண்டனில் பல ஆண்டுகள் மருத்துவ மேற்பார்வையாளராகப் பணியாற்றினார்.

1854 ஆம் ஆண்டு கிரிமியாப் போரில் காயம் பட்டோரைக் காப்பாற்ற மருத்துவ உதவி கிடைக்கவில்லை; நாட்டு மக்கள் வருந்தினர்.

பிளாரன்ஸ் அம்மையார், தன் துணைக்குத் தாதியர்களையும் பெண் தொண்டர்களையும் அழைத்துக் கொண்டு சென்று போர் வீரர்களுக்கு உதவினார்.

**விளக்கேந்திய சீமாட்டி**

அவர் பணியாற்றியது ஸ்டான்புல் இராணுவ மருத்துவமனை. அங்கே நல்ல கழிப்பிடம் இல்லை; மருத்துவ சிகிச்சைக்குரிய கருவிகள் இல்லை; கட்டில் மெத்தை இல்லை; உணவோ மருந்தோ துணியோ ஒன்றுமே இல்லை.

ஆயினும் அம்மையார் மனம் தளரவில்லை; தன் சொந்தப் பணத்தை எல்லாம் செலவிட்டார்; வேண்டிய வசதிகளைச் செய்தார். வீரர்களை நோயினின்றும் காத்தார்.

பகல் முழுவதும் நோயாளிகளுக்கு உதவுவதிலேயே காலம் கழியும்; இரவிலாவது உறங்குவாரா பிளாரன்ஸ்? உறங்கமாட்டார். கையிலே விளக்கை ஏந்திக்கொள்வார். ஒவ்வொரு நோயாளியின் படுக்கையாகச் சுற்றிச் சுற்றிப் பார்த்து வருவார். அதனால் நோயாளிகளால் விளக்கேந்திய சீமாட்டி எனச் செல்லமாக அழைக்கப்பட்டார்.

இங்கிலாந்தில் மட்டுமா அவர் தொண்டு சிறப் படைந்தது. அவர் தொண்டு இந்தியாவிலும் பயன்பட்டது. இந்திய மருத்துவமனைகளுக்கு அவர் தன் ஆலோசனைகளை அளித்தார்; பயிற்சி பெற்ற மருத் துவத் தாதியர்களை அனுப்பிவைத்தார்.

**இறைவன் கட்டளை**

அவர் வாழ்நாள் முழுவதும் நோயாளிகட்குத் தொண்டு செய்வதிலேயே காலம் கழித்தார். அதுவே இறைவன் தனக்கு இட்ட கட்டளையாகக் கருதினார்.

பிளாரன்ஸ் நைட்டிங்கேல் செல்வக் குடியிலே பிறந்தவர்; ஆயினும் அவர் செல்வச் செழிப்பிலே வாழ விரும்பவில்லை. பேரழகு வாய்ந்தவர்; அந்தப் பேரழகில் அவர் பெருமை கொள்ளவும் இல்லை.

அவர் விரும்பியதெல்லாம் எளிமை; ஏழை களுக்கு உதவுதல்; நோயாளிகளைப் பாதுகாத்தல். அவரைப் போலவே நம் உள்ளமும் எளியவர்கட்கு இரங்குவதாக.

## செய்முறைப் பயிற்சி

1. பிளாரன்ஸ் நைட்டிங்கேல் இளமைப் பருவம் பற்றிக் கூறு.
2. பிளாரன்ஸ் எந்தப் பணியை விரும்பினார்?
3. இராணுவ வீரர்களுக்கு அவர் எவ்வாறு பணியாற் றினார்?
4. 'விளக்கேந்திய சீமாட்டி' எனப் பாராட்டப்பட்டது ஏன்?

**நீ கற்றுக்கொள்ளவேண்டிய நன்னெறி :**

1. நோயாளிகட்கு உதவு; அவர்கட்டுஆறுதல் கூறு.
2. தருமம் செய் ; எளியவர்கட்குச் செய்.

# 2. ஆல்பர்ட் சுவிட்சர்

பொதுப் பணி

வறியவர்கட்குக் கொடுப்பதே ஈகை; எளியவர் கட்கு உதவுவதே சேவை; ஊனமுற்றவர்களுக்கு இரங்குவதே இரக்கம்; க்கம்மாறு கருதாமல் செய்யப் படுவதே பொதுப்பணி.

பொதுப்பணி, பொருளால் தான் செய்ய முடியும் என்பதில்லை. அன்பு மொழியாலும் செய்யலாம்; உடல் உழைப்பாலும் செய்யலாம்; நல்ல உள்ளத்தாலும் செய்யலாம்

ஆல்பர்ட் சுவிட்சர் பிறர்க்கென வாழ்ந்த பெருந் தகையாவார். அவர் மறைந்தபோது நம் குடியரசுத் தலைவர்என்ன சொன்னார் தெரியுமா ?

"சுவீட்சரின் மறைவால் உலகமே ஏழையாகி விட்டது" என்பதுதான்.

இளமை

இளமையிலே எளிமையாக வாழ்ந்தவர் ஆல்பர்ட் சுவிட்சர். அவர் எளியவர் அணியும் குல்லாய்தான் தனக்கு வேண்டும் எனக்கேட்டார். தந்தையோ உயர்ந்த விலையுடைய குல்லாய் அணியுமாறு கட்டா யப்படுத்தினார். அதற்காக அவர் அடித்ததும் உண்டு. எளிமையில் இன்பம் காண வந்த சுவிட்சர் அதற்கு இணங்குவாரா என்ன ?

இரக்க மனம்

ஒருவன் ஒரு நொண்டிக் குதிரையை அடித்துக் கொண்டிருந்தான். சுவிட்சர் அதனைக் கண்டார். இரவெல்லாம் அவருக்குத் தூக்கமே வரவில்லை.

நொண்டிக் குதிரை அடிபட்டதை எண்ணியே வருந்தி ஞர். "இறைவா! உயிர்களை எல்லாம் துன்பத்தி லிருந்து மீட்டருளும்." என வேண்டிக்கொண்டே இருந் தார். அத்தகைய இரக்க உள்ளம் படைத்தவர் சுவிட்சர்.

"உயிர்களிடத்து மதிப்பு வை" என்பதே இவர் பொன்மொழி. இவர் தத்துவத்தில் மேதை; இசையில் வல்லவர்; மருத்துவத்தில் ஆர்வம் உடையவர்.

மருத்துவர் ஆனர்

ஒரு நாள் இவர் செய்தித் தாளைப் புரட்டிக் கொண்டிருந்தார். அதில் 'காங்கோவின் தேவை' என்ற ஒரு தலைப்புக் காணப்பட்டது. அதில் 'காங்கோ மக்கள் தொழுநோயால் துன்புறுகின்றனர்; மலேரியா வால் மரண வேதனை அடைகின்றனர்; மருத்துவர் களின் துணை இல்லாமல் அவர்கள் அவதிப்படு கின்றனர். என்று எழுதப்பட்டிருந்தது.

'சுவிட்சர்' மனம் வேதனையால் துடித்தது ; வேண் டியவர்களெல்லாம் வேண்டாமெனத் தடுத்தனர்; ஆயினும் சுவிட்சர் மருத்துவக் கல்வி கற்க முடிவு செய்தார். மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தார்; ஐந்து ஆண்டுகளுக்குள் மருத்துவப் பட்டம் பெற்ருர்.

மருத்துவரான சுவிட்சர் உடனடியாக ஆப்பிரிக்கா வுக்குப் பயணமானுர்; 'லேம்ப்ரின்' என்ற இடத்தில் உள்ள மருத்துவமனையில் பணியாற்றத் தொடங்கினுர்.

அங்குள்ள நோயாளிகள் கல்வியறிவு அற்ற வர்கள்; மூடத்தனம் மிக்கவர்கள்; சொல்வதைக் கேட்டு நடக்கும் பண்பு அற்றவர்கள்,

சுவிட்சர் மூன்று வேளைக்கு மருந்து கொடுப்பார்; அவர்கள் ஒரே வேளையில் குடித்து விடுவார்கள். குறிப்பிட்ட இடத்தில் தேய்க்க மருந்து கொடுத்தால் உடல் முழுவதும் தேய்த்துக் கொள்வார்கள் ; கட்டப்பட்ட காயங்களை வருபவர்களுக்கெல்லாம் திறந்து காட்டுவார்கள்.

அத்தகையவர்களைத் திருத்தியது எது? சுவிட்சரின் அன்பு மொழி; ஆதரவான வார்த்தைகள்; இரவு பகல் பாராத கடுமையான உழைப்பு. இவையே அந்த மக்களைத் திருத்தின.

ஏசுவின் பிறந்த நாளா? சுவிட்சர் பரிசு வழங்குவார். யாருக்கென்று நினைக்கிறீர்கள்? அங்குள்ள நோயாளிகளுக்குத்தான்.

அக்காலத்தே தொற்று நோய் என்று கருதப்பட்ட நோய், தொழுநோய்; ஆயினும் சுவிட்சர் அவர்களோடு வாழ்ந்தார்; அவர்களின் நோயைப் போக்கினார். அடுத்தவரைப் பிடிக்கும் நோயே மலேரியா; ஆயினும் அவர்களுடனே இருந்து அவர்களின் நோயைப் போக்கினார்.

**மருத்துவமனைகள் உருவாயின**

சுவிட்சர் மருத்துவராக மட்டுமா பணியாற்றினார்? மருத்துவ மனைகளையும் கட்டினார். ஐந்து மருத்துவ மனைகள் அவர் உழைப்பால் உருவாக்கப்பட்டன. மருத்துவமனைகளைச் சுற்றிலும் நோயாளிகள் உலாவத் தோட்டங்களை அமைத்தார்; அவர்கள் துணிகளை வெளுக்கத் தனிப் பகுதியை உருவாக்கினார்.

காந்தியண்ணல் அகிம்சையையும் சத்தியத்தையும் உயிராகக் கொண்டிருந்தார்; சுவிட்சரோ 'உயிர்களிடத்து மதிப்பு' என்ற இரண்டு வார்த்தைகளையே உயிராகக் கொண்டிருந்தார்.

ஒரு நிகழ்ச்சி

சுவிட்சரின் நண்பன் துப்பாக்கியை எடுத்தான்; பறக்கும் பறவை ஒன்றைச் சுடுவதற்குக் குறி வைத்தான். சுவிட்சர் என்ன செய்தார் தெரியுமா? அவன் பறவையைக் குறிபார்த்தபோது அவன் கையைத் தட்டிவிட்டார்; அவன் கோபத்தோடு பார்த்தான். இவர் சொல்லாமலேயே ஓடி விட்டார். உயிர்களின் மீது அவ்வளவு இரக்கம் சுவிட்சருக்கு.

மாணவர்களே! நீங்களும் உயிர்களிடத்து இரக்கம் காட்டுங்கள்! நோயாளிகட்கு உதவுங்கள்.

செய்முறைப் பயிற்சி

1. சுவிட்சர் மருத்துவக் கல்வி பெறவே ஆசைப்பட்டார் ஏன்?
2. சுவிட்சரின் இரக்க குணத்தை எவ்வாறு அறியலாம்?
3. சுவிட்சரின் சேவையைக் கூறு.

நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி :

1. நான்மருத்துவராக வருவேன்; ஏழைகளுக்கு இலவசமாக மருத்துவம் செய்வேன். இவ்வாறு மன உறுதி கொள்.
2. எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் காட்டு.

# 3. கோபால கிருஷ்ண கோகலே

இந்திய மக்களின் ஒப்பற்ற தந்தையாக விளங்கியவர் மகாத்மா காந்தி ஆவர். அவரால் "என் அரசியல் குரு" என வணங்கப்பட்டவர் கோபால கிருஷ்ண கோகலேயே ஆவர்.

கோபால கிருஷ்ண கோகலே ஏழையாகப் பிறந்தார்; எளிய வாழ்க்கையை மேற்கொண்டார்; தமையனாரின் உதவியால் கற்றார்.

ஆங்கில விரிவுரையாளர்; கணக்குப் பேராசிரியர்; வரலாற்று அறிஞர்; பொருளாதார வல்லுநர்- இத்தனை பெருமைகளையும் ஏற்றவர் கோபால கிருஷ்ண கோகலே,

### தொண்டு உள்ளம்

உயர்ந்த பதவிகள் கோகலேயைத் தேடி வந்தன; செல்வத்தைத் தேடித் தரும் பதவிகள் அவரைத் தேடி வந்தன; ஆயினும் கோகலே அவற்றை ஏற்றுக் கொள்ளவில்லை.

தக்காணக் கல்விக் கழகத்தில் சேர்ந்தார். தக்காணக் கல்விக் கழகம் தாய்நாட்டு இளைஞர்களின் கல்வியறிவைப் பெருக்கத் தோன்றியது; தியாக மனப்பான்மை கொண்டவர்களே அங்குப் பணியாற்ற முடியும்.

ஏனென்றால் அளவான ஊதியமே அங்கே கிடைத்தது; வாழ்க்கை நெறியிலும் சில கட்டுப்பாடுகள் உண்டு. என்றாலும் நாட்டுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற நல்ல எண்ணமே அவரைத் தக்காணக் கல்விக் கழகத்தில் சேர்ந்தது.

### கல்வித் தொண்டு

அந்தக் கல்விக் கழகத்திலும் குழப்ப நிலை ஏற்பட்டது; ஒருவர்பின் ஒருவராகக் கல்விக் கழகத்தை விட்டுச் சென்றனர். கல்லூரி நடத்துவதற்கே கட்டடம் எழுப்ப வேண்டியிருந்தது. என்ன செய்வார்

கோகலே? எல்லாம் கோகலேயின் தலையில் விழுந்தது.

கல்லூரியில் மாணவர்களுக்குக் கணிதம் போதித்தார்; வெளியே கட்டட நிதி வசூலித்தார்; நிதி வசூலுக்காகப் பலரையும் சந்தித்தார்; சிலரிடம் அவமானப்பட்டதும் உண்டு.

எத்தனை வேலைகள் இருந்தாலும் அவர் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்காமல் இருக்க மாட்டார். ஓர் ஆசிரியர் வரவில்லை என்றால் அவர் பாடத்தையும் இவர் நடத்துவார்;

நாட்டுத் தொண்டு

இருபத்திரண்டு வயது நிறைந்த கோகலே சிறந்த சொற்பொழிவாளராக விளங்கினர். அதனால் அவரை ஒரு சொற்பொழிவாளராகக் காங்கிரசுக் கட்சி அழைத்தது.

'உப்பு வரியைக் குறைக்க வேண்டுமென்று சொற் பொழிவு ஆற்றினர்; அரசாங்க உத்தியோகத்தில் இந்தியர்களை அமர்த்த வேண்டும் எனப் பாடு பட்டார்.

"ஆங்கிலேய அரசு இராணுவச் செலவைக் குறைத்துக் கொள்ள வேண்டும்; இந்திய மக்களின் கல்விக்காகவும் சுகாதாரத்துக்காகவும் அதிக பணம் செலவழிக்க வேண்டும்" என்று போராடினர்.

இந்திய நாட்டில் கட்டாயக் கல்வி கொண்டுவர வேண்டுமென்று பெரு முயற்சி செய்தார் கோகலே. நகரமன்றங்களைச் சீர்திருத்தி அமைத்தவர் கோகலே. விவசாயிகளுக்காகப் போராடியவர் கோகலே.

இந்தியர் படும் இன்னல்களை ஆங்கிலேயரிடம் எடுத்துக்காட்டிப் போராடினர் ; பெண் கல்விக்காகப் பெரும்பாடு பட்டார்.

பாரத ஊழியர் சங்கம்

கோகலேயின் தூயதொண்டினை அவர் அமைத்த பாரத ஊழியர் சங்கத்தின் இலட்சியங்களே உணர்த்தும்.

இட்சியவாதி

சங்கத்தின் உறுப்பினர்கள் பின் வரும் ஏழு பிரதிக்ஞைகளை எடுத்துக் கொள்ளவேண்டும்.

1. தாய்நாடே என் முதல் நினைவாக இருக்கும் ; என் ஆற்றல் முழுவதையும் அதற்கே பயன்படுத்து வேன்.

2; நாட்டுத் தொண்டில் ஈடுபடும்போது சொந்த நலனைக் கருதமாட்டேன்.

3. இந்தியர் அனைவரும் சகோதரர்களே ; சாதி வகுப்புப் பிரிவினை பாராட்டாமல் எல்லோருடைய நன்மைக்காகவும் உழைப்பேன்.

4. எனக்கும் என் குடும்பத்துக்கும் சங்கம் கொடுக்கும் வசதிகளோடு திருப்தி அடைவேன்;

5. தூய வாழ்வு வாழ்வேன்.

6. எவருடனும் பகைமை கொள்ள மாட்டேன்.

7. சங்கத்தின் இலட்சியங்கள் என் நினைவில் எப்போதும் இருக்கும்.

இவற்றைப் பின்பற்றி ஒழுகியவர் கோகலே.

மாணவர்களே! கோகலேயின் உயர்ந்த இட்சியங்கள் உங்களுக்கும் வழிகாட்டியாக அமையட்டும்.

### செய்முறைப் ப்யிற்சி

1. காந்தியின் அர்சியல் குரு யார்?
2. கோகலே ஏன் தக்காணக் கல்விக் கழகத்தில் சேர்ந்தார்?
3. கோகலேயின் கல்விப் பணி யாது?
4. கோகலேயின் நாட்டுப் பணி யாது?
5. கோகலே எவற்றிற்காகப் போராடினர்?
6. பாரத ஊழியர் சங்கத்தின் கொள்கைகள் யாவை?

நீ கற்றுக்கொள்ள வேண்டிய நன்னெறி :

1 உள்ளதைக் கொண்டு நல்லதைச் செய்.

2. ஒருவரிடமும் பகைமை கொள்ளாதே.

## 4. காந்தியடிகள்

மாணவர்களே! காந்தியடிகளைப் பற்றி நீங்கள் நிறைய படித்திருப்பீர்கள். நம் நாட்டுச் . சுதந்தரத்தின் தந்தை ஆயிற்றே அவர்.

நம் நாட்டுக்கு விடுதலை பெற்றுத் தந்தவர் காந்தியடிகள்.

அது மட்டுமன்று அவர் தொண்டு. ஒவ்வொரு துறையிலும் சமுதாயத்திற்காக அவர் தொண்டாற்றியிருக்கிறர்; அவர் தொண்டினை ஏற்காத இடமே இல்லை.

நிறவெறியோடு போராட்டம்

காந்தி தென்னுப்பிரிக்காவுக்குச் சென்ருர்; அங்கு நிறவெறியை எதிர்த்துப் போராடினுர்; நிற வெறியால் அடிமைப்படுத்தப்பட்ட இந்திய மக்களுக் காகத் தொண்டாற்றினுர்.

மாணவர்களே! நிறவெறி என்ருல் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?

வெள்ளேக்காரர்கள் வெள்ளே நிறம் படைத்தவர் கள்; நீக்ரோக்களும் நம் இந்தியர்களும் கரிய நிறம் பெற்றவர்கள். வெள்ளே நிறம் உயர்ந்தது; கரிய நிறம் தாழ்ந்தது என்ற எண்ணமே நிறவெறி ஆகும்.

அதனுல் வெள்ளேயர் நம்மவரைக் கேவலமாக நடத்தினர். அடிமைகளாக நடத்தினர். அந்த நிற வெறியை ஒழிப்பதற்காகவே காந்தியடிகள் போரா டினுர். அதில் வெற்றியும் பெற்ருர்.

கிராம சேவை

நம்முடைய கிராமங்களில் பள்ளிக்கூடங்களே இல்லே. அதனுல் அங்குள்ளவர்கள் படிப்பதற்கே வசதி இல்லே.

படிப்பறிவு இல்லாத அந்த மக்கள் சுத்தமாக வாழவேண்டும் என்பதை அறியாதவர்களாக இருந்த னர்.

கிராமத்து மக்கள் சுகாதாரத்தோடு வாழவேண் டும்; நாகரிகமாக வாழவேண்டும்; உயர்ந்த வாழ்வு வாழவேண்டும்: நாட்டுப் பற்ருேடு வாழவேண்டும்.

இத்தகைய வாழ்க்கையை அவர்கள் பெறுவதற் குக் கல்வி அறிவு தேவை. ஆகவே காந்தியடிகளால கிராமங்களில் பள்ளிக்கூடங்கள் தொடங்கப்பட்டன.

கஸ்தூரிபா, தேவதாஸ் காந்தி ஆகியவர்களின் துணை யோடு கிராமங்களில் கல்விப் பணியைத் தொடங்கினார் காந்தி. கிராமங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ள உதவினார். குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்க உதவினார். சிற்றூர் மக்கள் சீர் திருந்தி வாழ வேண்டும் எனப் பாடுபட்டார்.

அரிசன சேவை

தீண்டாமை என்றால் என்ன? தாழ்ந்த குலத்தில் பிறந்த ஒருவன் உயர்ந்த குலத்தவனைத் தொட்டு விட்டால் உயர்ந்த குலத்தவனுக்குத் தீட்டு வந்து விடும். உடனே அவன் ஆற்றிலோ குளத்திலோ சென்று நீராடி அந்தத் தீட்டினைப் போக்கிக் கொள்வான்.

தாழ்ந்தவன் உயர்ந்தவனைத் தொட்டுவிடக் கூடாது; அது பாவம்! அப்படி எவனாவது தொட்டு விட்டால் அவனுக்குத் தண்டனையும் உண்டு.

பன்றியையும் கழுதையையும் மாட்டையும் நாயையும் தொடுவார்கள். ஆனால் மனிதன்-உழைக்கும் மனிதனைத் தொட்டால் மட்டும் பாவம் என்பார்கள். இத்தகைய மூடப்பழக்கம் நம் நாட்டில் ஒரு சிலரால் வளர்க்கப்பட்டிருந்தது. அந்த மூடப் பழக்கத்தை ஒழிப்பதற்காகக் காந்தியடிகள் போராடினார். குல இந்துக்களும் அரிசனத் தலைவர்களும் ஒன்றுபட வேண்டும் என்பதற்காக உண்ணாவிரதம் இருந்தார். தீண்டாமை ஒழிப்புக்காகத் தீவிரமாகத் தொண்டாற்றினார்.

இந்து முஸ்லீம் ஒற்றுமை

இந்த நாட்டில் வாழ்வோர் அனைவரும் இந்தியர்களே! ஆயினும் அவர்கள் மதம் காரணமாக இந்துக்களாகவும் முஸ்லீம்களாகவும் பிரிக்கப்பட்டனர். மதம்

காரணமாகவே இந்துக்களும் முஸ்லீம்களும் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டு மாய்ந்தனர். அவர்களை ஒன்றுபடுத்தும் முயற்சியில் ஓயாது உழைத்தார் காந்தியடிகள். அதற்காகப் பல நாட்கள் உண்ணு விரதம் இருந்தார்; தன்னையே வருத்திக் கொண்டார்

ஏழையாக வாழ்ந்தார்.

ஒருமுறை தமிழ்நாட்டுக்கு வந்தார் காந்தி; அங்கே உழவப் பெருமக்கள் நான்கு முழத் துண்டோடும் கோவணத்தோடும் காட்சியளிப்பதைக் கண்டார்.

தன் பக்கத்தில் இருந்த ஒருவரை அழைத்தார். 'ஐயா, இந்த மக்கள் இடையில் கட்டிய ஒரு துண்டுடன் இருக்கிறார்களே! மேலே சட்டை இல்லை; தலைக்குத் தலைப்பாகை இல்லை; இடையில் உடுத்துவதற்கு நல்ல வேட்டியும் இல்லை, என்ன காரணம்?'' என்று கேட்டார்.

அப்போது காந்தி எப்படியிருந்தார் என்று நினைக்கிறீர்கள்? அவர் இடுப்பிலே எட்டு முழ வேட்டி; முழுக்கை சட்டை; மேலே ஒரு போர்வை அளவு துண்டு; தலையிலே பெரிய தலைப்பாகை; நீங்கள் வடநாட்டுச்சேட்டுகளைப் பார்த்திருப்பீர்களே! அவர்களைப் போலவே இருந்தார்.

அதனால்தான் தமிழ்நாட்டு மக்களைப்பார்த்தவுடன் அந்தக் கேள்வியைக் கேட்டார். பதில் என்ன கிடைத்தது தெரியுமா? ''இவர்கள் ஏழை உழவர்கள்; உடை வாங்க முடியவில்லை; அதனால்தான் இப்படிக் கோவணத்தோடு இருக்கிறார்கள்.'' என்பதுதான். ''என் நாட்டு மக்கள், வசதியோடு என்றைக்கு நல்ல ஆடைகளை உடுத்துகிறார்களோ அன்றுதான் நானும் முழு உடைகளை உடுத்துவேன்;'' என்று கூறிய காந்தி

தன் ஆடைகளைக் களைந்தார். நான்கு முழத்துண்டு ஒன்றினை மட்டுமே உடுத்திக் கொண்டார்.

தன் நாட்டு மக்களைப்போலத் தானும் வாழவேண்டும் என முடிவுசெய்தார்; நான்கு முழத் துண்டோடு வாழ்ந்து காட்டினார். அது மனித தெய்வம்!

செய்முறைப் பயிற்சி

1. காந்தி ஆப்பிரிக்காவில் நடத்திய போராட்டம் என்ன ?
2. தீண்டாமையை ஒழிக்கக் காந்தி என்ன செய்தார் ?
3. காந்தியின் எளிய வாழ்வினைக் கூறு.



**நீ கற்றுக் கொள்ள வேண்டிய நன்னெறி :**

1. மக்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பிக்காதே.
2. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.

## 5. உண்மை பேசும் காந்தி

உண்மை பேசும் காந்தியாம்
உலகம் புகழும் காந்தியாம்.
அன்பை வளர்த்த காந்தியாம்
அருளைப் போற்றும் காந்தியாம்.
சத்தி யத்தின் சோதனை
தாங்கி வளர்ந்த காந்தியாம்.
புத்தர் ஏசு நெறிதனைப்
போற்றி வளர்த்த காந்தியாம்
ராட்டைச் சுற்றிச் சுற்றியே
நாட்டை வாங்கித் தந்தவர்.
பாட்டுப் பாடி வாழ்த்தியே
பணிவோம் இந்த நாளிலே.
உலகம் ஒன்று சேரவே
உயர்ந்த வழிகள் காட்டிய
பலரும் போற்றும் காந்தியாம்
பாரதத்தின் தந்தையாம்.

—புலவர் சிவகாமி.

அண்மையில் அரசினரால் வெளியிடப்பெற்ற புதிய பாடத்திட்டத்தினை முற்றிலும் பின்பற்றித் தயாரிக்கப் பட்டுள்ளது இந்நல்லொழுக்கக்கல்வி நூல் வரிசை.

இவ்வரிசையில்... ... ...

மூன்றும் வகுப்பு
நான்காம் வகுப்பு
ஐந்தாம் வகுப்பு
ஆறாம் வகுப்பு
ஏழாம் வகுப்பு
எட்டாம் வகுப்பு

THE PROCEEDINGS OF THE DIRECTOR OF SCHOOL EDUCATION, MADRAS.
R. C. No. 122296, E4/76
DATED 25-9-1976.

"PAPER USED FOR THE PRINTING OF THIS BOOK WAS MADE AVAILABLE BY THE GOVERNMENT OF INDIA AT CONCESSIONAL RATES".